உ
*சிவமயம்*

*அரி ஓம் நன்றாக குரு வாழ்க குருவே துணை*

# நாதாந்தம்

என்னும்

# பண்ணிலக்கணச் சூக்கம்

(இசை இலக்கணம்)

இந்நூல் ஆசிரியர் :

"தமிழ் வேதநாவலர்", "வைத்தியமணி"
முத்தமிழ் வேதத் திருச்சபை

**சற்குரு. சித.வே. சண்முகநாத பிள்ளை**

தேவகோட்டை

நிறுவுனர்

**முத்தமிழ் வேதத் திருச்சபை**

*தேவகோட்டை - 630 302.*

*கோயம்புத்தூர்*
*ஸ்ரீ பாலாஜி கிராபிக்ஸில் பதிப்பிக்கப் பெற்றது.*

*வெளியீடு*

**முத்தமிழ் வேதத் திருச்சபை**

*முத்தாத்தாள் நடுநிலைப் பள்ளி*
*வ.பெரி.மு. தெரு, தேவகோட்டை - 630 302.*

உ

*சிவமயம்*

*அரிஓம் நன்றாக குருவாழ்க குருவே துணை*


| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | நாதாந்தம் என்னும் பண்ணிலக்கணச் சூக்கம்<br>இசை இலக்கணம் |
| முதலாம் பதிப்பு | : | விக்ரம வருடம் ஆவணி மாதம் (9/9/2000) |
| மறு பதிப்பு | : | விகாரி வருடம் தை மாதம் (25/1/2020) |
| நூலாசிரியர் | : | சற்குரு. சித.வே. சண்முகநாத பிள்ளை |
| உரிமை | : | முத்தமிழ் வேதத் திருச்சபையோர், தேவகோட்டை. |
| பக்கங்கள் | : | 56 |
| வெளியீடு | : | முத்தமிழ் வேதத் திருச்சபையார், தேவகோட்டை. |
| தாள் | : | 18 கிலோ மாப்லித்தோ |
| நூலின் அளவு | : | டெமி 1/8 |
| விலை | : | ரூ. 51/- |
| எழுத்து | : | 13.5 புள்ளி |
| கிடைக்குமிடம் | : | **இராம. ஆதிரெத்தினம்**<br>இணைச் செயலாளர், முத்தமிழ் வேதத் திருச்சபை<br>19, ரெகுநாதபுரம் மேற்கு, தேவகோட்டை.<br>போன் : 95+4561+270113 செல் : 9486361107 |
| கணினி & அச்சு அமைப்பு | : | **ஸ்ரீ பாலாஜி கிராபிக்ஸ்**<br>கோயமுத்தூர் - 641 001.<br>செல் : 9361410269<br>email : sribalajigraphics.cbe@gmail.com |

உ
*சிவமயம்*
*அரிஓம் நன்ருக குருவாழ்க குருவே துணை*

# நாதாந்தம் என்னும் பண்ணிலக்கணச் சூக்கம்
# இசை இலக்கணம்

## முன்னுரை

ஓங்காரத்தின் உட்பொருளை ஓதி உணர்ந்த ஞானத்தெளிவுகுரு சித.வே.சண்முகநாத பிள்ளையின் திருவடி என் உச்சிமேற்கொண்டு நாதாந்தம் என்னும் இசை இலக்கணமாகிய பண்ணிலக்கணச் சூக்கத்திற்கு முன்னுரை எழுதுவோமாக.

உடம்பின் உறுப்புகள் முப்பத்திரண்டு ஆக இருக்கிறது. வேத அங்கம் ஆருக அமைவது ஏனெனில் வேதம் ஒலியை உடம்பாகக் கொண்டது. அவ்வொலியானது வளியால் வெளியில் உலவும் தன்மையைப்பெற்ற உடம்பை உடையதாகிறது. அந்த ஒலியும் வளியும் செயல்படும் நிலையம் கொண்ட பெரும்நாடி சிரம், அத்தம் (கை), தோள், தொடை, பாதம் இவைபொருந்திய உடலாக அமைந்திருக்கிறது. அதில் சிரம் உயிர்நிலையாகிய காயத்தில் சித்செய் என்னும் சூக்கமாக அமையும். மற்றயவை சூக்கமாகிய சிரத்தைத் தலைப்பட்டு நிற்கும் தூலமாக இருக்கும். தூலத்தில் காண்பன எல்லாம் சூக்கமாக சிரத்தினிடத்து காண்பதால் சூக்கத்திற்கு சித்செய் என்றும் பெயர். ஓசை, பரிசம், உருவம், ரசம், கந்தம், புத்தி, மனம், அகங்காரம் என்ற (அ) எட்டும் கண், செவி, வாய், மூக்கு என்ற நான்கும் சேர்ந்து (௰௨) பன்னிரண்டாக இருக்கும். அந்த பன்னிரெண்டே வேதபுருஷனின் சிரமாகவும் அச்சிரத்தில் தோன்றும் சூக்கம் ஆகி அந்த பன்னிரண்டாய் நிற்கும் சுவாசமானது பனிரெண்டும் எட்டும் ஆக விளங்குவது போன்று விளங்குவதை விரித்து இப்பண்ணிலக்கணச் சூக்கம் நூல் தெளிவாக்குகிறது. சூக்கமாகிய சித்செய்யை ஓதி உணர்வது முதன்மைத்தாகும்.

வேதபுருடனின் ஆறு அங்க விளக்கம் வருமாறு. (௧) சித்செய் (சிட்செய்) சூக்கம் பன்னிரண்டு (௰௨) ஆகிய சிரம். (௨) வியாகரணம் என்னும் மேற்கணக்கு (௯) ஒன்பதாகிய அத்தமும், சந்தசு என்னும் எழுதாக்கிளவி மூன்ருகிய தோளும் நிருத்தம் என்னும் ஒடுக்கம் ஐந்து (௫)

ஆகிய தொடையும், சோஓது இடம் என்னும் கீழ்கணக்கு ஒன்பதாகிய பாதமும், கற்பம் என்னும் மெய்வளம் (எ௰உ) எழுபத்திரண்டாகிய உடம்பும் கொண்டு ஒலி உருவாகிய வேதம் ஒரு புருஷாகிருதியாக நிற்கும் அவ்வாறு நிற்கப்பெறும் உருவிற்கு கருவாக விளங்குவது துவித சித்தாந்த சுருதி வடிவாம் பீடமுமாக நிற்கும் பிரணவமாம்.

மேற்கூறிய மேற்கணக்கு கீழ்கணக்கு என்னும் இரண்டில் ஈரு ஒன்பது பதினெட்டாகத் தோன்றினுலும் கணக்கு என்பது எட்டில் அமைந்து விளங்கும் இயல்புடைய எண்ணுகவே ஓர் உருக்கொண்டு விளங்கி ஒன்பதாகியபடியால் அது ஈரெட்டு பதினுருகவே அமையஆம் முறையால் ஆறு. அங்கங்களின் கூட்டுத்தொகை நூற்றிஎட்டாகவே ஆகிறது. ஆகவே உரு என்பது நூற்றெட்டு என்பதாகவே வழக்கில் அமையப்பெற்று விளங்குகிறது. இதில் மெய்வளம் என்பது மேளம் என்று வழங்குகிறது.

நம் சமயக்குரவர்கள் நால்வர்களில் தவமுதல்வர் திருஞான சம்பந்தமூர்த்தி கலி 16க்கு நலந்திகழும் செய வருடம் சித்திரை மாதம் 6ஆம் தேதி வெள்ளிக்கிழமை திருவாதிரை நட்சத்திரம் சுகர்ம நாமயோகம் சஷ்டிதிதி கவுல கரணம் பூர்வபட்சம் கூடிய நன்னுளில் உதயாதி நாழிகை ஒன்பதேகாலே மூன்று வீசம் கால்வீசம் அளவில் சீர்காழிச் சிவபாத விரதியருக்கும் பகவதியாருக்கும் உலகம் உய்யச் செய்யும் திருமகவாக திருவவதாரம் செய்தருளினுர் என்று திருஞானசம்பந்தர் காலநிர்ணய விளக்கம் என்ற நூல் கூறுகிறது.

ஒலிகொள் சம்பந்தனெண் தமிழ் எழுதாக்கிளவியாகிய தேவாரத்தில் முதல் திருமுறையில் நட்டபாடைப்பண், தக்கராகப்பண், பழந்தக்-கராகப்பண், தக்கேசிப்பண், குறிஞ்சிப்பண், வியாழக்குறிஞ்சிப்பண், மேகராகக்குறிஞ்சிப்பண் ஆகிய ஏழு. இரண்டாம் திருமுறையில் இந்தளப்பண், சீகாமரப்பண், காந்தாரப்பண், பியந்தைக்காந்தாரப்பண், நட்டராகப்பண், செவ்வழிப்பண் ஆக ஆறு. மூன்ரும் திருமுறையில் காந்தாரபஞ்சமப்பண், கொல்லிப்பண், கொல்லிக் கௌவாணப்பண், கௌசிகப்பண், பஞ்சமப்பண், சாதாரிப்பண், பழம் பஞ்சுரப்பண், புறநீர்மைப்பண், அந்தாளிக்-குறிஞ்சிப்பண் ஆக ஒன்பது. மேற்கூறிய பண்களில் இருந்து எடுத்துக்காட்டிய வரிகள் பின்வருமாறு.

உ
*சிவமயம்*

“பண்ணிலாவும் மறை பாடலினனிறைசேரும்வளையங்கைப்”
“பண்ணியல் பாடல்வல்லார்களிந்தப்பாரொடுவிண்பரிபாலகரே”
(“பண்ணும் பதமேழும் பலவோசைத்தமிழவையும்”)
“பண்ணார் தருமறையா யுயர்பொருளாயிறையவனைக்”
“பண்ணோடிசை பாடிய பத்தும் வல்லார்கள்”
“கண்ணின்றெழு சோலையில்வண்டு பண்ணின்றொலிசெய்பனையூரே”
“பண்ணார் பாடலாடலருத பசுபதியீசனோர்பாகம்”
“பண்ணார் மறைபாடப் பரமனதிகையுள்”
“பண்ணார் செய்யும் பட்டிணத்துப் பல்லவனீச்சரமே”
“பண்ணார் மறைகள் பாடினரெனவும்”
(“பண்ணிடை யொன்பது முணர்ந்தவர் பத்தர் பாடிநின்றடிதொழ”)
(“பண்ணின் மொழி சொல்ல விண்ணுந்தமதாமே”)
“பண்ணியல்பாற் பாடியபத்தும் இவைவல்லார்”
“புண்ணியராய் விண்ணவரோடும் புகுவாரே”
“பண்புனை குரல் வழிவண்டுகிண்டிச்”
“பண்ணார் நான்மறைபாடும் பரமயோகி”
“பண்ணமரும் மென்மொழியார் பாலகரைப் பாராட்டுமோசை கேட்டு”
“பண்டெலாம்பலி தேர்ந்தொலி பாடல் பயின்றதே”
“பண்ணினல்ல மொழியார் பவளத்துவர் வாயினார்”
“பண்ணிலான இசை பாடல்மல்குஞ் திருவாஞ்சியத்”
“பண்கொளப் பாடவல்லார்க்கில்லை பாவமே”
“பண்ணாரப் பாடவல்லார்க்கில்லை பாவமே”
“பண்பயன்கொளப் பாடவல்லார்”
“விண்ணுலாமதி சூடிவேதமே பண்ணுளார் பரமாய பண்பினர்”
“பண்ணமரு மென்மொழியினானை யணைவிப்பான்”
“பண்ணிய நடத்தொடிசை பாடுமடியார்கள்”
“பண்ணினொலி கொண்டு பயில்கின்ற பழுவூரே”
“பண்ணார்மொழி மங்கையோர் பங்குடையான்”
“பண்ணொளிசேர் நான்மறையான் பாடலினோடாடலினன்”
“பண்ணொன்ற இசையோடு மடியார்கள் குடியாக”
“பண்ணிசையா லேத்தப் பாடுவான்றன் நெற்றியின்மேல்”
“கண்ணுடையான் மேவியுறை கோவில் கைச்சினமே”
“பண்காட்டு மிசையானும் பயிர்காட்டும் புயலானும்”

**“பண்மொய்த்த இன்மொழியாள்”**
**“பண்பொலி செந்தமிழ்”**
**“பண்ணினேர் மொழி மங்கைமார் பலர்”**
**“பண்ணமர் பாடலினுரும் பாண்டிக்கொடுமுடியாரே”**
**“பண்ணிலாவிய மொழியுமை பங்கனெம்பெருமான்”**
**“பண்ணின் பாடல் கைந் நரம்பாற்பாடிய பாடலைக்கேட்டு”**

அண்ணலாயருள் செய்த அடிகளுக்கிடமரசிலியே. என்று பண்ணின் இசைக்கு, இசையும் இறைவன் என்ற அதிநுட்பத்தை அறிந்து ஐம்பூதங்களுக்கும் தாயாகிய நாதத்தால் அரிய பெரிய செயல்களைச் செய்து காட்டினுர்.

திருநின்ற செம்மையே செம்மையாகக் கொண்டு வாழ்ந்த திருநாவுக்கரசர் சுருதி நூலாகிய தேவாரத்தில் நான்காம் திருமுறையில் பண்கள் கொல்லி, காந்தாரம், பியந்தைக்காந்தாரம், சாதாரி, பழந்தக்க–ராகம், பழம்பஞ்சுரம், இந்தளம், சீகாமரம், குறிஞ்சி, திருநேரிசை, திருவிருத்தம், ஐந்தாம், ஆறும் திருமுறைகளில் திருக்குறுந்தொகை, திருத்தாண்டகம் அமைத்து ஓதி உலகம் உய்ய அருளிச் செய்திருக்கிறுர். மேற்கண்ட பண்களில் இருந்து எடுத்துக் காட்டிய வரிகள் பின்வருமாறு.

**“பண்ணுர்ந்த வீணை பயின்ற விரலனே”**
**“பண்ணுர் முழவதிரப் பாடலொடாடலனே”**
**(“பண்ணுண்ட பாடலோடும் பரம நீ யாடுமாறே”)**
**“பண்ணினைப் பாடவைத்தார் பத்தர்கள் பயிலவைத்தார்”**
**(“பண்ணிடைச் சுவைகள் பாடியாடிடும் பத்தர்க்கென்றும்”**
**“கண்ணிடை மணியர்போலும் கடவூர் வீரட்டனுரே”)**
**“பண்ணுலாம் பாடல் கேட்டார் பழனத் தெம்பரமனுரே”**
**“பண்ணினுர் பண்ணின் மிக்க பாடலார் பாவந்தீர்க்குங்”**
**(“பண்ணிடைச் சுவையின் மிக்க கின்னரம் பாடல் கேட்பார்”)**
**“பண்ணினைப் பாடியாடும் பத்தர்கள் சித்தங் கொண்டார்”**
**“பண்ணொடு பாடறன்னைப் பரவுவார் பாங்கராகிக்”**
**“பண்ணினுர் பாடலாகிப் பழத்தினிலிரதமாகிக்”**
**(“பண்ணிசைமொழி பாடிய வானவர் தாம் பணிவார்”)**
**“பண்ணுர்களி வண்டு பாடியாடும் பாராய்த்துறையுள்மேய பரமர் போலும்”**

உ
*சிவமயம்*

"பண்ணுலாம் பாடல் கேட்டார் பழனத்தெம்பரமனுரே"
("பண்ணின் இன்மொழி கேட்கும் பரமனே")
"பண்காட்டிப் படியாயதன் பத்தர்க்குக் கண்காட்டிக் கண்ணில் நின்ற
மணியொக்கும்"
"பண்ணவனைப் பண்ணில் வருபயனுனைப்"
("பண்ணிடைச் சுவைகள் பாடி ஆடிடும் பத்தர்க் கென்றுங்")
"பண்ணவன்காண் பண்ணவற்றின் திறலானுன் காண்"
"பழமாகிச் சுவையாகி பயக்கின்ருன்காண்"
"பண்ணிலங்கு பாடலோடாடலாரும் பருப்பதமும்"
("பண்ணின் நேர்மொழி யாளுமை பங்கரோ"
"பண்ணினைப் பவளத்திரள் மாமணி அண்ணலை"
"பண்ணுர்ந்தமைந்த பொருள்கள் பயில்பாதிரிப் புலியூர்க்"
"பண்ணிற் பாடல்கள் பத்திசெய் வித்தகர்க்கு"
("பண்ணில் ஓசை பழத்தினில் இன்சுவை")
"பண்ணுரப் பல்லியம் பாடினுன் காண்"
("பண்ணின் இசையாகி நின்ருய் போற்றி")

("பண்ணுரிசையின் சொற்கேட்டாய் போற்றி") என்று வாகீசப் பெருந்தகையார் நாதத்தை கைவரப்பெற்று அதன் மூலம் உலகிற்கு மறைக்கதவைத் திறக்கப் பாடியதும், சமணர்கள் சூழ்ச்சியில் சிக்கிய மன்னன், அப்பர் சுவாமிகளுக்கு ஐம்பூதத்தினுலும் தீங்கு செய்ததை பண்கொண்டு வென்றதை எழுதாக்கிளவியாகிய தேவாரம் ஓதும்.

வன்றெண்டர் நம்பியாரூரராகிய சுந்தரமூர்த்தி சுவாமிகள் ஓதிய ஏழாம் திருமுறையில் இந்தளப்பண், தக்கராகப்பண், நட்டராகப்பண், கொல்லிப்பண், கொல்லிக்கௌவாணம், தக்கேசிப்பண்,காந்தாரப்பண், பியந்தைக்காந்தாரம், காந்தாரப்பஞ்சமம், நட்டராகம், புறநீர்மை, சீகாமரம், நட்டபாடைப்பண், குறிஞ்சிப்பண் மேற்கண்ட பண்களில் இருந்து எடுத்துக்காட்டிய வரிகள் பின்வருமாறு.

"பண்ணுளீராய்ப் பாட்டும் ஆனீர் பத்தர் சித்தம் பரவிக்கொண்டீர்"
"பண்ணிசையார் மொழியார் பலர் பாடப்"
("பண்ணிடைத் தமிழொப்பாய், பழத்தினிற் சுவையொப்பாய்பங்குடையாய்")

“பண்ணேர் மொழியாளை ஓர் பங்குடையாய்” என்று ஐம்பூதத்தையும் அடக்கி ஆளும் தாயாகிய நாதத்தை கைவரப்பெற்று அதன் மூலம் ஐம்பூதத்தையும் ஏவல் கொண்டு பல அற்புதங்களைச் செய்து காட்டியது இப்பண்ணில்தான் என்பதை அடங்கன் முறையாகிய தேவாரம் ஓதும்.

இறைவனை சிக்கெனப் பிடித்து ஞான சொரூபியாய் வாழ்ந்த மாணிக்கவாசக சுவாமிகள் இயற்றி திருவாசகத்தில்

**‘‘பண்ணினேர் மொழியாள் பங்க நீ யல்லாற் பற்று நான் மற்றிலேன் கண்டாய்’’**

**‘‘பண்ணோர்ந்த மொழிமங்கை பங்கா’’**

“பண்களிகூர்தரு பாடலொடாடல் பயின்றிடும்” என்றும் மேலும் அவர் பாடல்கள் அனைத்தும்

“பண்சுமந்த பாடற்பரிசு படைத்தருளும்” என்கிறார் சமயக்குரவர்கள் நால்வரும்.

**‘‘அடங்கலுந் தன்னுள் அடக்கி அடங்கும்**
**இயைபுள நாதத் தியைந்து விளங்க**
**அமைதிரு முறையே அடங்கன் முறையாம்’’**

என்ற எம் ஞானத்தெளிவு குருவின் திருமுறைப் பெருநூல் விளக்கத்தில் உள்ள சூத்திரத்தின்படி நாதத்தைக் கைவரப்பெற்று அந்நாதத்தால் பண் இயற்றி அதன் மூலம் இறைவனை எளிதில் அடைய ஆக்கியது தான் தேவாரம், திருவாசகம் என அறிக.

மேலும் நம் ஔவை மூதாட்டிப் பெருந்தகை பேரன், பேத்திகளுக்கு எளிமையாக அறத்தைப் புகட்ட இயற்றிய நூல்கள் பல. அவற்றுள் “நல்வழி” என்ற நூலில்

**‘‘தேவர் குறளுந் திருநான்மறை மொழியும்**
**மூவர் தமிழு முனிமொழியுங் – கோவை**
**திருவா சகமும் திருமூலர் சொல்லும்**
**ஒருவா சகமென் றுணர்’’**

என்ற அமுத வாக்கிற்கிணங்க இதுவரை திருநான்மறைமொழியும்

சுருதிநூல், ஆதிநூல், இருக்கு, எழுதாக்கிளவி, திருமுறைப்பெரு நூல் அடங்கன்முறை என்று பலபெயர் கொண்ட தேவாரத்திலும் பண்சுமந்த திருவாசகத்திலும், ஆராய்ந்தோம் இனி நம்மூலமுதற் குருவாகிய குறிப்பில் குறிப்புணர வைக்கும் குறியறி சித்தராகிய திருமூலர் திருமந்திரத்தில் மூன்றும் தந்திரம் தியானம் பிரிவில் ஐம்பத்தி ஒன்றுவது மந்திரம்.

**''கண்ணுக்கு மூக்குச் செவிஞானக் கூட்டத்துட்**
**பண்ணுக்கி நின்ற பழம்பொரு ளொன்றுண்டு**
**வண்ணுக்கி னுள்ளே யகண்ட வொளிகாட்டிப்**
**புண்ணுக்கி நம்மை பிழைப்பித்த வாறே'' என இயம்புகிருர்**

கண், நாக்கு, மூக்கு, செவிகளில் முறையே அதர்வணவேதம் என்னும் வாமநூற்சுருதி, இயற்சீர்வேதம் (யசூர்) என்னும் தத்தவுரியச் சுருதி, சாமவேதம் என்னும் பூவூடியச் சுருதி, இருக்குவேதம் என்னும் (ரிக்) தவளாகரச் சுருதி பிறப்பிடமாக அமைகிறது. நான்கையும் சுமந்து இருக்கின்ற மெய் வேதாந்தம் என்னும் அறவண்ணச் சுருதியாக அமைந்து ஒலிக் கூட்டங்கள் ஒன்று கூடி செய்யக்கூடிய பழம்பொருள் பண் ஆகும். அப்பண் அண்ணுக்கின் உள்ளே அகண்ட ஒளிகாட்டி புண்ணுக்கி நம்மை பிழைப்பித்தவாறே எனக் கூறுகிருர். இதை மூலக்குரு வழிவந்த எம் ஞானத் தெளிவுகுரு சித.வே.சண்முகநாத பிள்ளை அவர்கள் இயற்றிய திருமுறைப் பெருநூல் விளக்கத்தில் (அ) (கூ) (ய) (யகூ)ஆகிய நான்கு சூத்திரங்களில்

**''அந்தமும் ஆதியும் ஆகி நின்ற**
**பதியின் நடனம் பாசச் தியைந்த**
**பசுவெளி முகமாய் பார்க்குங் காலை**
**ஐவகை வேற்றுமை யாகித் தேன்றும் (அ)**

**ஐவகை வேற்றுமை யதுதனிச் சிறப்பு**
**தன்மை யடுக்கென சாற்றும் பண்ணும் (கூ)**

அதுவே,

**வேற்றுமை ஐந்தாய் விளங்கப் பெற்றதால்**
**வேதம் நான்கொடு வேதாந்தம் ஒன்றும்**
**ஆகிய ஐந்தாய் அமைவு பெற்றது (ய)**

| | | | |
|---|---|---|---|
| வேத | வேதாந்தமாய் | விளங்கும் | பண்ணெனும் |
| தனிச் | சிறப்புடைய | தன்மை | யடுக்குப் |
| பஞ்ச (பண்ச) | பீடத்திற் | பதிசெய் | நடனப் |
| பதச் | சுவடானது | பதிந்து | தோன்ற |
| எழுந்த | எழுத்து | ஏழே | ழிரண்டெனும் |
| நாத | ஒலியையும் | நாத | விரியாம் |
| ஐம்பத் | தொன்றையும் | அகத்தியம் | ஆக்கும் |
| ஐந்தாய் | அஃதடங் | கக்கர | மொன்ருய் |
| விந்தொலி | யாக | விளங்கு | தமிழையும் |
| உடம்பாய் | கொள்ளும் | உயரரி | சித்தரி |
| எழுத்து | முதற்பண் | தாரீ | ருகப் |
| பிறக்கு | மொன்பான் | பிறப்புடை | யொன்ருய் |
| மாலெனும் | பசுவரு | வாகித் | தோன்றும்'' (௰௩) |

ஆகவே,

வேத வேதாந்தமாய் விளங்குவது பண்தான். கண்ணுக்கு மூக்கு செவி ஞானக் கூட்டம் செய்யும் பழம் பொருள் பண்தான்.

இவ்வளவு அரும்பொருளாகிய பண்ணிற்கு இலக்கணம் செய்து அருளியிருக்கிருர் எம் குரு. மேலும் “பண்ணும் பதமேழும்” என்பது எழுத்து, அசை, சீர், யாழ், யாப்பு, அடி, திறம். (எ) இந்த ஏழால் பதம் பார்த்த பொருளின் பெயர் பண் (அ) எட்டாகும். அந்த பண்ணிற்கு உரியவர் பண் தார் ஒன்பதாவார். ஆக “பண்ணிடை ஒன்பதும் உணர்ந்தவர்” பத்தர், பண்சுமந்து இருப்பதும் இந்த ஒன்பதைத்தான் என அறியலாம்.

பதி நம் அகத்தில் ஆடும் நடனத்தை பண்ணுகச் சமைத்து (பதிஅகம்) பதிகம் ஆக தந்திருக்கிருர்கள். “பண்ணுண்ட பாடலோடும் பரமநீ ஆடுமாறே” என்ற வாகீசர் வாக்கை உணர்வதற்கு நாதாந்தம் என்னும் பண்ணிசை இலக்கணச் சூக்கம் உறுதுணே புரியும். இந்நூல் பட்டினத்தார் காலத்தில் இருந்திருந்தது. பட்டினத்தடிகளோ தமது பாடலில் “கண்ணுண்டு காணக் கருத்துண்டு நோக்கக் கசிந்துருகிப் பண்ணுண்டுபாட” என்று கூறுகிருர். ஆகவே அவர் காலத்தில் இசை இலக்கணம் இருந்தது தெளிவாகிறது. மேலும் அவர் இயற்றியருளிய திருக்கோயிஞன் மணி

மாலையில் "மிடலொடியப் பண்டிலங்கையர் கோனெரு விரலின் முக்குண்டு பண்பல பாடிய விரகு செவிக் கொண்டு முன்புள தாகிய வெகுளி தவிர்த்தன்று பொன்றியிடா வகைதிட மருள் வைக்குஞ் செழுஞ்சுடர்" என்ற பாடலை நோக்கும் போது இராவணன் சாமவேத கானம் பாடி இறைவனை மகிழ்வித்து உயர்வு பெற்றதும் தமிழ்ப் பண்ணிசையிலேயேயென்றும், செந்தமிழ்ப் பண்ணிசையிலேயே சாமவேதம் இருந்துளதென்றுந் தெளிவாகிறது. ஆனல் தாயுமானுர் காலத்தில் அவர் தம் பாடலில் "பாகத்தினுற் கவிதை பாடிப் படிக்கவோ பக்தி நெறியில்லை, வேத பாரயணப் பநுவல் மூவர் செய்பநுவலது பகரவோ இசையுமில்லை'' என்று விளக்குகிருர்.

மேலும் அருணகிரிநாதர் ஆறுமுகமான பொருள் நீ யருளல் வேண்டும் என முருகப் பெருமானிடம் முறையிடுகிருர். அவர் அன்று கேட்டதன் விளைவாகவும் கலியின் கொடுமை தீர ஆரம்பித்ததன் அறிகுறியாகவும் இந்நூல் இது சமயம் சிவ புண்ணிய சீல மெய்யன்பர்களுக்குக் கிடைக்க இறைவன் அருள்புரிந்துள்ளார். பண்ணிசை இலக்கணச் சூக்கம் அறிந்தால் தான் பண்பாடி முழுமையாக நாதத்தின் ஆற்றலை உணர முடியும். மேலும் நாதாந்தமாகவே தமிழ்க்–கடவுள் முருகன் இருக்கிருர் என்பதை இந்நூல் தெளிவாகக் காட்டுக்கிறது. தமிழ் மூதாட்டி ஔவையாருக்கு விநாயகக் கடவுள் புரியட்ட காயம் புலப்பட உணர்த்தியிருக்கிருர். புரியட்ட காயம் என்பது சத்த, பரிச, உருவ, ரச, கந்தம், புத்தி, மனம், ஆங்காரம், இவைகள் தாம் சூக்கமம். சண்முகதூலம் என்பது கனி, மலர், காய், மா, விளம், நாள் நாதத்திற்கு (இசைக்கு) உருவம் புரிய சூக்கமத்தைக் கொண்டு சும்மா இருந்து அம்மா பொருளை அறிய நாதாந்தம் என்னும் பண்ணிசை இலக்கணம் இயமநியம நெறி நிற்போர்க்கு உறுதுணை புரியும் என்பதில் எள்ளளவும் ஐயமில்லை. எம் ஞானத் தெளிவுகுரு சிறுபிராயம் தொட்டு இயம நியம நெறி வழியே சென்று நேர்மையில் ஒன்றிதறியிருத்தாற்போல் தம்மை இருத்தி தன்னுள் தமிழ் என்னும் அமிர்த கலையை கற்று உணர்ந்து இந்நூலை ஆக்கித் தந்திருக்கிறார்கள். "கற்ருேர்க்கு அழகு கற்றுணர்ந்து அடங்கல்" என்பதற்கு எடுத்துக் காட்டாக வாழ்ந்து முத்தமிழ் வேதத் திருச்சபையைத் தோற்றுவித்து

அதன் மூலம் சில பேருக்கு வேதம் கேட்கும் புண்ணியத்தை உருவாக்கிக் கொடுத்து மேலும் அவர்நிழலாக அவர் தம் நூல்களை எங்களுக்கு மிகுந்த கருணை உள்ளத்துடன் எம் ஞானத்தெளிவு குரு பெற்ற இன்பத்தை நாமும் பெறத் தந்திருக்கிறார் என்றால் அதுவும் உண்மைதான். இந்நூல் வெளிவர ஆரம்பம் முதல் நிறைவு வரை உறுதுணை புரிந்த ஸ்ரீ பாலாஜி கிராபிக்ஸ் உயர்திரு புஷ்ப. சுவாமிநாதன் அவர்கள் குடும்பத்தாருக்கு என்னுடைய மனமார்ந்த அன்பு கலந்த நன்றியை உளமார தெரிவித்துக் கொள்கிறேன். எம் ஞானத்தெளிவு குருவின் நூலை முத்தமிழ் வேதத் திருச்சபை மூலம் எனக்கு வெளியிட இறையருள் கூட்டி வைத்ததை எண்ணி எண்ணி இம்மானிடப் பிறிவியின் பயனைப் பெற்று விட்டோம். என மனநெகிழ்ந்து வரும் பிறவி தோறும் முத்தமிழ் வேதத் திருச்சபையின் தெளிவு ஞானகுருவின் அடிமையாகவே வாழ இறைவனை வேண்டிக் கொள்கிறேன்.

இங்ஙனம்

**இராம. ஆதிரெத்தினம்**

முத்தமிழ் வேதத் திருச்சபை

உ
*சிவமயம்*

அரிஓம் நன்ருக குருவாழ்க குருவேதுணை

## எம் ஞானத் தெளிவுகுரு இயற்றிய ஞான சரஸ்வதி பதிகம்
## பண் பியந்தைக் காந்தாரம்

திருச்சிற்றம்பலம்

சிரேஸ்டம் நிறைந்த தவளம் படர்ந்து திகழ்கின்ற துய்யஒளியின்
திரேளோ ருருக்கொண் டிலங்கின்ற போன்று திருமேனி கொண்டவிமலை
புரளோத மென்ன நிலநின்றெழுத்து பொங்கித் ததும்பு புனலால்
நிரலோங் குசாலி வயற்கோவில் வீடுநிலை பெற்றிருக்குமிடமே. க

சிரையஸ் ஸதான வொலி மல்குவீணை சிவஞான நல்குசுவடி
கரைகண்ட கோவை மணிமாலைகொண்டு கமலத்திருக்குமிறைவி
விரைகொண்ட வண்ண மலர்சிந்துசோலை விரிசுழியாறும் எழிலார்
திரைகொண்ட வாவி திகழ்கோவில்வீடு திகழத் துலங்குமிடமே. உ

சிரோஒண் மணியாய்த் தரிக்கின்ற தேவன்சிகுவை யஃதுண்மை மொழியும்
புரோவோதி யற்கையினர் நாவும் வீடாய்ப் பொருந்தித்துலங்கு மிறைவி
சரோ சத்தி லன்னம் தளிதன்னில் ஈசன் தமிழ் தன்னிலோது மறைபோல்
திரோதாயி யற்றேர் திகழ்கோவில் வீடு தெளிவுற்றிருக்குமிடமே ௩

சிரஅவ்வு ஓதும் அறுபத்து நான்கு தெளிபோத நல்கு நோக்கும்
பிரவாக மாகக் கவிதாம் ருதஞ்சீர் பெறநல்கு துப்புமுடையாள்
வரவாக நல்ல வெனவைம் புலத்தார் மகிழ்வாக வேணதுதவித்
திரமாக வாழ்வோ ருடைக்கோவில் வீடு திகழத் துலங்குமிடமே ச

உலகத்திலோங்கு பெருமக்களூற்ற வுயர்மேதை யென்று புகழப்
பலகற்ற பேரும்துதி செய்ய ஞானப்பனுவல் நுவலத்தருந்தாய்
நலகற் றுயர்ந்தோர் கதிவேண்டி நோற்றல் நயந்தோரிடமுமனையும்
திலகங் களென்ன வளர்கோவில் வீடு சிறப்புற்றிருக்குமிடமே ரு

சவையோர் விரும்ப மதுரஞ் சிறந்து சதுரா யியம்பும் உரையும்
நவையற்ற ஓசை யெழிலுஞ் சமஸ்த நலமும் பெறச்செய் இறைவி
சுவைமிக்க சித்ரமணி மாடகூடச் சுடர்மாளிகைகள் நிதியக்
குவைகள் நிறையும் பதிக்கோவில் வீடு குலவிப் பொருந்துமிடமே சா

உ
*சிவமயம்*

மொழிகின்ற ஆசுமதுரம் விசித்ர முயர்வாய வித்தாரமாம்பா
பொழிகின்ற காள முகிலென்ன வாக்கிற் பொருந்தத் தரிக்கும் இறைவி
கழிகின்ற நாட்கள் இழியாதறஞ் செய்கவின் மிக்க மக்கள் மறைநூல்
வழிநின்று காட்டும் உயர்கோவில் வீடு மகிழ்வா யிருக்குமிடமே ௭

கலைஞானமான தறுபத்து நான்குங் கனிவாயுணர்த்தியருளி
நிலையான ஞான சிவபோத நல்கி நிறைவாய வின்பந்தருந்தாய்
குலையான தோங்கும் பலாமா நறும்பூங் குளிர்சோலை யெங்குமுளதாய்
தலையான வாழ்வு நிலைகோவில் வீடு சதுரா யிருக்குமிடமே ௮

நவமாம் வியாக ரணமோர்ந்து வேதம் நவில்கின்ற ஞானம்அருளி
பவமாயை நீக்கிச் சிவஞான மாக்குபவளாய் விளங்கு மிறைவி
தவராச யோகர் சதுர்வேதம் ஓது தமிழ்நன்குணர்ந்த பெரியோர்
சிவராச தானிஎனுங் கோவில்வீடு சிறப்புற்றிருக்கு மிடமே ௯

எழுகோணம் எட்டுள் நடுவிந்து வட்டம் இதழான தூடக்ஷரங்கள்
வழுவாததே சாட்சரியாய்த் துலங்க வரை சக்கரத்தின் இறைவி
நழுவாத வாய்மை யுடையோர்கள் ஓதநல மல்கு வேதஒலியால்
எழுதாத கேள்வி தெளிகோவில் வீடு இசைவா யிருக்குமிடமே ௰

திருச்சிற்றம்பலம்

## எட்டுக்கட்டளையால் அமைந்த நட்டபாடை பண் விளக்கம்
## பண் நட்டபாடை என்னும் பெயர் காரணம்

நாட்டம் இரண்டும் நாடவொன் ருனபோல்
சீர்யாழ் யாப்புஅடி திறம்இவை நாட்டம்
படஇரண் டொன்றும் பண்நட் டபாடை

## எட்டுக்கட்டளைத் திறங்கள் விளக்கம்

நேயநய வளம் நிகழ்த்தல் நைவளத்திறம்
குறிக்கப் படுவது படுகுறிச் சீர்திறம்
தீமைதீர் செம்மை செப்புதல் செந்நிறம்
என்கொல் சொல்லாய் எனல் அயிர்ப்புத்திறம்
தீமைதீர்தரு செம்மையின் பால்யேய்

*சிவமயம்*

திறஞ்செப்பிடுதல் செம்பாலைத்திறம்
அமைந்த சொல்லாய் என்றழைத்தல் நவில்திறம்
அருட்டிருப் பணியை யாற்றக் குறிப்பிட்
டறிவிக்கும் திறம் ஆற்றுக்குறிச்சீர்
குறிப்புறு செம்மையே குறிச்சீர் செந்திறம்.

திருச்சிற்றம்பலம்

அரி ஓம் நன்றுக குரு வாழ்க குருவே துணை

## இது பண்ணிலக்கணச் சூக்கம் என்னும் இசை இலக்கணம்

ஆசிரியர் "தமிழ் வேத நாவலர்", வைத்தியமணி
**சித.வே.சண்முகநாத பிள்ளை**, தேவகோட்டை

## நாதாந்தம் என்னும் பண்ணிசை இலக்கணச் சூக்கம்
## ஆறு அந்தங்களில் ஒன்றுகிய நாதாந்தம்

காப்பு

**சதாசிவ தத்துவ முத்தமிழ் வேத**
**மதன்முழக் கந்தரும் யாழொடு பண்ணின்**
**விதந்தே ரிலக்கணச் சூக்கம் விளக்க**
**மதகய மாமுகன் வார்கழல் காப்பே (௧)**

பண்ணிசை இலக்கணச் சூக்கக் காப்பாகிய இந்த சூத்திரப்பாவில் பாவின் ஆயிரம் என்னும் பாயிரம் ஆம். பாவின் சாகாத்திரம் மலிந்த சகத்திரமொழி அல்லது சாகாக் கலைசொல் "சதாசிவ தத்துவ முத்தமிழ் வேதம்'' அது ஞாஞசிரியனுரைத்தவாறு அநுபூதி சாதனம் பயின்று அந்நலத்தால் தன்னிடத்துறும் கலையே மெய்க்கலையென்றும் அக்கலை ஆறு ஆதாரங்களுள் மேனிலைத் தானமாகிய (அக்க இணை இயநிலைய) அதிதேவதையாகிய சதாசிவத்தின் பிரதிபலிப்பால் எதிர்நிலைப்பாட்டால் ஒலியுருப் பெறும் என்றும் அவ்வொலியுரு வெளி நோக்கில் (ஆர் இயம்) (நிரம்பிய ஒலி) ஆக விரிந்தாலும் அதை இலக்கில்கணம் என்னும் இலக்கணம் ஆம் இடந்தெரிந்து அடுக்கி ஒன்று கூட்டும் செயல் நலமுறச் செய்யலால் அதுவே தமிழ்ஆய் விளங்கும் என்றும் எவ்வாறெனின் கலை

இடம் வலம் என்று இரண்டாய்ப் பகுத்துச் சுட்டபெறலால் பகுத்துச்சுட்டும் எழுத்தாகிய "த" கரமும் அவ்விரண்டும் ஒன்ருய் ஒருமித்து மிக்குரும் வண்ணம் அணரியாகிய மேல்வாய்ப் புறத்தை நாவு சார்வுறச் செய்யும் அமிததாரஊணக் குறிப்பால் மிக்கதை யடக்கி "ழ்" ஆய்த் தமிழ் தோன்றியவாறு காண்க. பன்னிரண்டு உயிர்க் கஃலயாய் நின்ற அது மூவினமாய் மெய்நிஃல களாறைச் சார்ந்து பதினெட்டாகி அச்சடத்தை இயக்கி இசைவிக்க நடனஞ் செய்யலால் இயல் இசை நாடகம் என அத்தமிழ் மூன்ருயிற்றென்றும் அது ஒன்றற்கொன்று வேற்றுமைப்பாடு கொண்டுள்ள தஃலப்பைக் கொள்ளலால் வேதம் என்றும் அத்தஃலப்புக்கள் நால்வகைப் படலால் வேதம் நான்கென்றும் கண்டவாறு சதாசிவ தத்துவ முத்தமிழ்வேதம் எனக் கூறப்பெற்றது.

ஈண்டு பாயிரவுரை எனக்காட்டிய இருக்கு முதற்றந்திரம் எண்பத்தாருவது மந்திரம் முதலாவது உபதேசம் ஆக அமைந்த இயாமல ஆகமப் பாயிரத்தின் முகமாக வரைக்கப் பெற்றதெனவறிக.

வேதமாகிய தமிழிசை முழக்கம் யாழையும் பண்ஊயும் எவ்வாறு தோற்றுவிக்கின்றன என்பன வாதியவற்றைத் தெளிவாய் விளக்கும் சூக்கத்தை உரைக்கப் புகுதும் என்பது மேற்கூறிய முகவுரையைக் கொண்ட சூத்திரத்திற் பதிந்த அகவுரை.

தெளிதரு முத்தமிழ் வேதம் என வேதவுரிமைப் பாட்டு மொழித்தெளிவை யுணர்த்தி யதிலும் இருக்கு மந்திர மொழிவகை முனிபெற வுரைத்த சம்ப்ரம சரவணபவகுக என மந்திரம் வேத இருக்குகள் தோன்றிய பாசை முதல்வழிச் சிறப்பியல் கூறியதிலும் பண்ணிஞர்மறை, பண்ணமரு நான்மறை பண்ணெலி சேர்நான்மறை பண்ணிலாவும் மறை பண்பொலி நான் மறை என வேதச்சுருதி முழங்கும் இசைவளம் செப்பியதிலும் முற்கூறிய பதிகவுரைத் தெளிவு தோன்றுவதை முறையே கந்தரந்தாதி, திருப்புகழ், திருமுறை முதலிய நூன்முகங்களானறிக.

வேதம் வேத ரிக்கு வேதமந்திரம் முதலியவற்றிற்கெலாம் உரிய மொழி வடமொழி என்று பெரு வழக்காக உலகில் வழங்கல் என்ஊ. அஃது உடம்பை மெய் எனலும் தூலத்தை நான் எனலும் போன்ற வெளிப்படை நோக்கின் பாற்பட்ட வுண்மையே இஃது. பாராதிபுவனம் நீ யல்ஃல பற்றிப்

பாரிந்திரியங் கரண நீயல்லை ஆராய் உணர்வு நீ யென்ன பட்டவாறுணர்ந்ததும் உடலம் வேறு யான்வேறு கருவிவேறு வேருக வுதறிவாசகாதீத அடியூடொன்றி யுணர்ந்ததும் தன்னையறியத் தனக்கொரு கேடில்லை தன்னை யறியாமற்ருனே கெடுகின்ருன் எனக் கூறும் ஆகம நூற்சுட்டை யுணர்ந்து மேம்பட்ட நுண்மாண்நுழை புலனுடையோர்கள் கண்டதும் ஆகிய உட்கிடக்கைச் சூக்கத்தின் பாற்பட்டதான வுண்மையாம் முற்கூறிய நூன்முக உரையால் யேற்படும் ஐயப்பாட்டை நாமே தந்து உரைகூறித் தெளிவுபடுத்திய தந்துரையாம் இதை ஊன்றியுணர்க.

"முத்தமிழே வேதமாகும்". அந்த முத்தமிழ் சதாசிவ தத்துவத்திற் ருேன்றியதாகும். சதாசிவம் பூதாதியாகவுள்ள ஆகாயத்தின் அதிதேவதை. ஆகாயம் சலனத்திற்கு இடமாய் ஓசை விளங்கச் செய்து நிற்கும். ஆகவே நாதத்தின் கூருகிய முத்தமிழ் வேதம் சதாசிவதத்துவம் எனப் பெற்றது. அஃதை ஒலிவகையானுணரும் போது அந்த முத்தமிழோசை இயம் ஆழ்ந்து தோன்றுதலாகிய யாழினும் அதன் பேதமாகிய பண்ணினும் தோன்ரு நிற்கும். அதன் இலக்கணச் சூக்கத்தை விளக்க "மதகய மாமுகன் வார்கழல் காப்பு" என்பது பாயிரம் முதலாகவும் தந்துரை ஈருகவும் முற்கூறப்பட்ட ஐந்து உரைகளையும் அகமாக வைத்து ஆக்கிய பாவிற் கண்ட புறவுரை எனவுணர்க.

முருகப் பெருமான் திருவருட் பேற்ருற் கிடைத்த அகத்தியத்தை யுணர்ந்து அவ்வகத்திய மொழியையே அகமாக வைத்து அதன் அகப்புறமாகவும், புறமாகவும், புறப்புறமாகவும் புனைந்துரைக்கப்பட்டதே மேற்கூறிய அகவுரை புறவுரைகைள் எனவறிக.

அகத்திய மொழிப் புனைந்துரைக் கிடனுக வமைந்துள்ள பாவானது எழுத்தால் நாற்பத்தெட்டாகி விந்தாகி புள்ளியின் சார்வால் நாற்பத்தொன்பதுமாய் பாவும் பொருளும் ஆகிய இரண்டால் ஐம்பத்தொன்ருகி மந்திரமாய் அது வெண்பாச்சீரால் இருக்காகி வெண்டளையாப்பாகப் பூவுடன் கூடியமைவதால் இருக்கும் மந்திர மாலையாய் முற்கூறிய புனைந்துரையுட் காணும் அகம் அகப்புறம் புறம் புறப்புறம் ஆம் அணியின் அந்தத்தால் மாலா மந்திரம் ஆய் மிளிர்வன காண்க.

முத்தமிழ் வேதம் அதன் சுருதி யாழும் பண்ணும் அதன் நியதி முறையை விளக்கும் இலக்கச் சூக்கம் பண்ணிசை இலக்கணச் சூக்கம் அதைத்தெளிவு படுத்தத் தொடங்குதல் ஊறுபாடின்றி முடியும் பொருட்டு யானைமுகக் கடவுளை காப்பாகக் கொள்ளப்படுகிறது என்பது ஈண்டு கூறியனயாவும் இது பொழிலிற்பூவை நோக்குந் தகைமை யொத்த பொழிப்புரையேயாம். அப்படிப் பொழிற்பூவாக நோக்காமல் ஆய்ந்து நோக்கின் முன்னோர் மொழிபொருளே யன்றி யவர் மொழியும் பொன்னேபோற்போற்றுவம் என்பதற்கு எடுத்துக்காட்டாகவே ஆகமப்பனுவலை தலையாய் கொள்ளப் பெற்றதென்றும் இந்நூலில் உரைக்கப்பட விருப்பனவெல்லாம் முன்னோர் கூறிய மொழியாகவும் பொருளாகவுமே அமைவனவாகக் காண்பீர்களென்றும் சூசிப்பித்துரைத்தனவாகத் தோன்றுவனவே பொழிற்பூ ஆய்ந்துரையாம்.

## இசைவழி விளக்கம்

**அனுசிதச் சிவன் ஆதியாக**
**ஏழ்கோடி மந்திரர் எட்டுவித்தியேச்சுரர்**
**விளங்கும் அதர்வண வேதச் சாகையில்**
**ஈச்சுரம் மாயை என்பன வற்றில்**
**மாயைத் தத்துவம் அதனிற் றேன்றிப்**
**பூதவுரு வாய்ப்பொலி தருங்கானம்**
**என்னும் பண்ணின் இசையின் விளக்கம். (உ)**

பண்ணின் இசையானது கானத்தினின்று தோன்றப் பெறும், அக்கானமானது பூதாகாரமாய் விரிந்து நிற்கும். அப்பூதாகாரம் மாயையென்ற தத்துவத்தின் தோற்றம். அந்த மாயையும் ஈச்சுரமும் அதர்வண வேதச் சாகையில் விளங்கிக் காணும். அந்த அதர்வண வேதச் சாகை அட்ட வித்தியேச்சுரர். சத்தகோடி மகாமந்திரர்களைத் தன் அகத்தே கொண்டது. அது சாம வேத மூர்த்தியான அனுசிதச் சிவனை ஆதியாகக் கொண்டு தோன்ற நிற்கிறது. ஆகவே இப்பண்ணிசை இலக்கண விளக்கமானது சாமவேதத்தை அடிப்படையாகக் கொண்டு தோன்றப் பெரு நிற்கும்.

உ

*சிவமயம்*

# மேலும் இதன் விரி

பண்ணின் இசைக்கு ஆதாரமாயுள்ள * சாமவேதத்தையும் அதனின்றும் பிறந்த அதர்வண வேதத்தையும் இசைப்பதற்கு இந்த இசையை ஒரு உருவமாக உருவகப்படுத்திக் காட்டப் பெறுங்கால் தோன்றப் பெறுவதே நாதாந்தமாம். ஒலி வடிவாகிய நான்மறைகளையும் ஓதி யுணர்வதற்குக் காட்டப் பெறும் பண்ணிசை இலக்கணச் சூக்கமாகிய இந்நாதாந்தத்தில் முறையே நாதாந்தத்தையும் நாதத்தையும் விரித்து சொல்லப் பெறுகிறது. அதில் சாமவேத நாயகனுடைய அந்தத்தை ஆதியாகக் கொண்டு ஏழு கோடி மந்திரேச்சுரராகவும் அட்ட வித்தியேச்சுரராகவும் விரிந்து காணப்பெறும் அதர்வண வேதச் சாகையில் தோன்றிய இரண்டு தத்துவங்களாகிய ஈச்சுர தத்துவம், மாயா தத்துவம் ஆகிய நாதாந்தத்தில் மாயா தத்துவத்திற் ருேன்றியதே பூதாகாரமாய் விரிந்துள்ள கானம். இதிற் கூறிய மந்திரச்சுரரையும், வித்தியேச்சுரரையும் இவர்களுக்காதியாகிய அனுசிதச் சிவனையும் நாதாந்தமாக சாமவேத அதர்வண வேத சாகை விளக்கத்திற் கண்டு கொள்க. அதிற்ருேன்றிய ஈச்சுரம் மாயை யென்ற தத்துவத்தின் விரியே பண்ணிசைக்கு உரியதாக வமைவதால் அந்த ஈச்சுரம் மாயை என்ற இரண்டு தத்துவத்திற்கு மட்டுமே இந்நூலில் நாதாந்தமும் நாதமும் கூறப்பெறும் (இதிற் கூறப்பெறும் வேதம் ஞானசம்பந்தப் பெருமான் இயற்றிய தேவாரத்திருமுறையில் காணப் பெறும் எழுதாக் கிளவியாகிய தமிழ் மறையே)

## மாயாதத்துவம் ஈச்சுரதத்துவம் ஆகிய இரண்டிலும் இசை இலக்கணம் தோன்றும் முறைமை.

**பாசத்தியைந்த பகவுருவான**
**அரிபிரமன் முதலாகிய தேவர்**
**இருடிகள் அட்சதுர்த்திரிகள் கலைஞர்கள்**
**சகலரும் கலராய்த் தன்னுள் மாந்தக்**
**காணு மாந்தியாற் கனிமலர் காய்மா**
**விளநாள் எனுஞ்சீர் விளங்க நிற்கும் (௫)**

உ
*சிவமயம்*

# நாதாந்தம்

மாவினுடைய அந்தத்தைப் பொருந்தியதால் மாந்தியென்னும் மாமரமாக உருக்கொண்டு பதியையுணராமற் செய்யும் பாசத்தால் மறைக்கப்பட்ட பசுவின் உருவத்தைப் பொருந்திய அரிஅயன் முதலியோரும், தேவர்கள், இருடிகள், அட்சதுர்த்திரிகள் என்னும் அப்ஸரஸ்கள் மற்றுமுள்ள கலைஞர்கள் ஆகியோரெல்லாம் தனக்குக் கீழ்ப்பட்ட ஏவலராக அமையக் கொண்டுள்ள அசுரன் பொருட்டு சூரர்சேனுதிபதியாக ஆறுமுகக் கடவுள் விளங்கி நிற்பார் என்னும் நாதாந்தத்திற்கு.

# நாத விளக்கம்

பாசத்தியைந்த பசுவுருவான அரி = பற்றுக் கோட்டியல் காரணமாகிய வுருவத்தைக் கொண்ட பசுவாம் உயிரும். பிரமன் முதலாகிய தேவர் இருடிகள் அட்சதுர்த்திரிகள் கலைஞர்கள் = அவ்வுயிர் அளாவும் அளவிற் பூத்து விளங்கும் அளபுஆம் வேதனும், இவ்வாறு உயிரளவளபு கொளப்பூத்த புதுமையாகிய மெய்முற் கூறிய பசுவென்னும் கோ அடியைக் கொண்டு விளங்குதலால் முப்பத்து முக்கோடி தேவர்களாகிய முப்பத்து மூன்று மெய்யும், உயிர், நாதம் விந்து மூன்றும், பூதம் ஐந்தும், பூதியம் ஏழும் ஆகிய பதினைந்துடன் மெய் முப்பத்துமூன்றும் – ச – அகமாய்த் திரம்பெற்று விளங்கலால் சகத்திரம் என்னும் நாற்பத்தெண்ணுயிரம் இருசிகளாகிய நாற்பத்தெட்டு அச்சுக் கோவைகளாம் அச்சரங்களும் இவ்வுயிர் நாத விந்து பூத பூதிய மெய் ஆதியனவற்றின் மயக்கால் ஏற்படும் திரிபாகிய அச்சரத்திரிபாம் அப்சரஸ்திரீகளும் இங்கு கூறப்பட்ட உயிர், நாதம், விந்து, பூதம், பூதியம், மெய் என்னும் அறு வகையாகிப் புணர்வுகொள்ளும் கலைகள் ஆறும் சகலரும் கலராய்த் தன்னுள் மாந்தக் காணும் மாந்தியாற் எல்லா வகைப்பட்ட கலப்பும் தன்னுட் கலக்கக் கொண்டு மாச்சீரை முதலாகக் காணும்படி மாவினுடைய அந்தம் முழுவதையும் கொண்டுள்ள மாந்தியின் பொருட்டு கனி மலர் காய்மாவிளம் நாள் எனுஞ்சீர் விளங்க நிற்கும் = அறுவகைப் பட்ட சீர்கள் தோன்றி எல்லாவற்றையும் தன்னுண் மாந்தக் கொண்டு நின்ற மாந்தி தன்னுள் மாந்தும் படி விளங்கிக் காணும்.

மூன்ருவது சூத்திரத்திற்கு கூறிய நாதவிளக்கத்தில் வரும் உரைக்குறிப்பின் விளக்கம்.

அ – உயிர், இ – நாதம், உ – விந்து, எ, ஐ, ஒ, ஔ, ஃ இவ்வைந்தும் பூத எழுத்து.

“க” கரம் முதல் “ன” கரம் ஈருக உள்ள முப்பத்து மூன்று மெய்யெழுத்து.

ஆ, ஈ, ஊ. ஏ, ஓ, க்ரூ, க்லூ ஆகிய ஏழும் பூதிய எழுத்து.

அகரமாகிய உயிரும், இகரமாகிய நாதமும் உகரமாகிய விந்துவும், கூடும்

அளவிற் பூத்துக் காணும் அளவு பூ ஆக – எஏ – ஐ – ஒஓ– ஔ தோன்றும்.

## நால்வகைப் பாவின் தோற்றமும் தளையும் பெயர்க் காரணமும்

| | | | | |
|---|---|---|---|---|
| விளங்கி | நின்று | விரியுமிவ் | வாரும் | |
| ஈச்சுர | தத்துவத் | தியைந்து | தோன்றும் | |
| சண்முக | தூல | முன்னிலே | யதனில் | |
| கலித்த | லோசை | கண்ணிற் | றூங்கவும் | |
| வெளிறிசை | செவியில் | விள்ள | லாகவும் | |
| அகவ | லோசை | வாயத | னிலேங்கவும் | |
| வன்சீர் | நாசியின் | எஞ்சித் | துள்ளவும் | |
| விட்டலக் | கணமும் | விடாதலக் | கணமும் | |
| விட்டு | விடாத | விலக்கண | மும்வர | |
| வன்சீர்ப் | பிரமா | மறையோ | திடவச் | |
| சதுர்முக | வேதன் | றளைக்கொண் | டடங்கும் | (௬) |

## நாதாந்தம்

துலங்கிக் காணப்பெற்று விரியும் பெருமை மிக்கதாகிய இந்த ஆறுமுகங்களுடைய ஈஸ்வரனே தானுகப் பொருந்தித் தோன்றிய ஆறுமுகக் கடவுள் முன்னிலேயில் தெளிவின்றிக் கண்தூக்கக் கலக்கத்தாற் பிறக்கும் கலித்தலோசையும், கமையின்றி வெள்ளிடையாக விள்ளலால் செவியிற்படும் வெளிருெலி காதிற் செவிடுபடுமாறு ஒலித்தலாம்

வெளிறிசையும், ஆயாசம் மிகுந்து ஏங்க வாயாவித்தலாற் பிறக்கும் அகவலோசையும், அமைவின்றி வலிய சீத்காரத்துடன் நாசியிற் றேன்றித் துள்ளல் கொள்ளப் பிறக்கும் வன்சீர்யோசையும் ஆக இலக்கணத்தின் விடுபட்டும் விடுபடாமலும் விட்டும் விடாமலும் ஆகிய குழப்பத்துடன் பெருஞ்சிறப்பையுடைய பிரமன் வேதத்தை யோதிய காரணத்தால் தளைபுட்டிச் சிறையிட அடங்குவான். (என்னும் நாதாந்தத்திற்கு).

## நாத விளக்கம்

விளங்கி நின்று விரியுமிவ் வாறும் = தோன்றி நிலைத்துப் பெருகும் இந்த ஆறு வகையாகிய ஈச்சுர தத்துவத் தியைந்து தோன்றும் = மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐந்துவகைச் சுரத்தானங்களுக்கு ஆதியாகிய பிரமரந்திரத் தானமாம் நெற்றி நடுவில் ஒலிக்கும் – இ – என்னும் சுரம் பிறக்கும் ஈச்சுரத்திற் சலியாது தோன்றி அதுவே தானுய் விளங்கும்.

சண்முக தூல முன்னிலை யதனில் = இந்த ஆறுவகைப் பட்ட தலைப்பைப் பொருத்தியவுடம்பின் எதிர்முகமாக –

கலித்த லோசை கண்ணிற் றூங்கவும் வெளிறிசை செவியில் விள்ளலாகவும் அகவலோசை வாயதனிலேங்கவும் வன்சீர் நாசியின்எஞ்சித்துள்ளவும் = கண்துஞ்சலிற் பிறக்கும் கலித்தலோசையாம் தூங்கலோசையும், செவிமடுக்கும்படியாக வெளிப்படையாய்த் தோன்றும் விள்ளலோசையாம் வெள்ளையோசையும், வாயாவித்து யேங்கிசையாகப் பிறக்கும் அகவலோசையும், நாசியினிடத்து வலிய சீறலோசையாகத் துள்ளிப் பிறக்கும் துள்ளலோசையாம் வன்சீர் ஓசையும்.

விட்டலக் கணமும் விடாதலக் கணமும் விட்டு விடாதலக் கணமும் வர = விட்ட இலக்கணமுடையதாகிய கலியும், விடாத இலக்கணமுடையதாகிய வெள்ளையும், விட்டும் விடாமலும் உள்ள இலக்கணம் கொண்டு விளங்கும் அகவலும் தோன்றும் படியாக – வன்சீர்ப்பிரமா மறையோதிட வச்சதுர்முக வேதன் றளைக் கொண்டடங்கும் = வஞ்சிச் சீரினுக்குரியதும் நடுச் சீராகவமைவதும் மேற்கூறிய நால்வகை வேதையிற் பிறக்கும் வேதத்தை யோத நால்வகையினும் தளைதோன்றிக் கட்டுண்டு காணும்.

உ
*சிவமயம்*

# இசை விளக்கத்திற்குப் புரியட்டகாய விரியின் காரணம்

| | | | | |
|---|---|---|---|---|
| சதுர்முகன் | சூக்கமாய்த் | தளைப்படச் | செய்து | |
| பண்சார் | பாற்பிர | பஞ்ச | தொழிற்செய்யும் | |
| சண்முக | தூலம் | இன்ன | தாம்என | |
| புரிய | அட்ட | விரியை | யுரைப்போம் | (ரு) |

## நாதாந்தம்

நான்முகன் சுலபத்தில் விலங்கிடப்படும் செயல்புரிந்து ஐவகைப் பட்ட பூதங்களுக்கும் தாயகமான நாதத்தால் பிரபஞ்சத் தொழில் விளங்கச் செய்யும் அறுபொருளுண்மை இவ்வகைப் பட்டதென்று தெளிவாய்ப் புரியும்படியாக எட்டிலக்கணங்களையும் விரித்துச் சொல்லுகிறோம். என்னும் நாதாந்தத்திற்கு.

## நாத விளக்கம்

சதுர்முகன் சூக்கமாய்த் தளைப்படச் செய்து = மெய், வாய், கண், மூக்கு, செவியென்னும் ஐவகை தானங்களிலுறவாய் நான்கு தலைப்பை முடிவிற் கொண்டு தோன்றப் பெறும் உறுப்பு ஆகிய கலிப்பா, வெண்பா, ஆசிரியப்பா, வஞ்சிப்பா என்னும் வேறுபாடுகளுடைய நான்கிற்கும் தளை காணப் பெறும் நுணுக்கச் செயலால், பண்சார்பாற் பிரபஞ்சத் தொழிற் செயும் = மண், நீர், தீ, கால், வெளி ஆகிய ஐந்திற்கும் தாயகமாகிய நாதத்தால் ஐந்தியற்றொடர்கள் அனைத்தையும் ஐந்தொழிற் படுத்தி ஆள்வினை புரியும், சண்முக தூலம் இன்னதாம் எனப் புரிய அட்ட விரியையுரைப்போம் = முதன் மெய்ப் பொருளாறு இவைகளேயாம் எனத்தெளிய இலக்கணம் எட்டின் பரப்பை யுணர்த்துகிறோம்.

## இசைக்குரிய சீர்வகை ஒடுக்கம் ஆறு

| | | | | |
|---|---|---|---|---|
| கனிமலர் | காய்மா | விளம்நாள் | என்பன | |
| ஆறும் | சண்முக | தூலமாய் | அமையும். | (சா) |

உ
*சிவமயம்*

# நாதாந்தம்

கனிவு, மலர்வு, காய்வு, உம்ங்காரிப்பு விளங்கொள்ளல், நார்மை நோக்குந்தாதலை முறையே கொண்டு விளங்கும்.

**ஏறுமயிலேறிவிளையாடு முகமொன்றே (கனிவு)**
**ஈசருடன் ஞானமொழி பேசுமுகமொன்றே (மலர்வு)**
**கூறும் அடியார்கள் வினை தீர்க்குமுகம் ஒன்றே (காய்வு)**
**குன்றுருவ வேல்வாங்கி நின்றமுகம் ஒன்றே (உம்காரம்)**
**மாறுபடு சூரரை வதைத்த முகம் ஒன்றே (விளம்)**
**வள்ளியை மணம்புணர வந்தமுகம் ஒன்றே (நார்மை)**

ஆகக் காணும் ஆறுமுகங்களைக் கொண்ட மெய்ப்பொருளொன்றே வெளிப்படைத் தோற்றத்தில் ஷண்முகநாதனைக் காணவமையும் என்னும் நாதாந்தத்திற்கு.

## நாத விளக்கம்

கனிமலர் காய்மா விளநாள் என்பன ஆறும் = பிரியம், மகிழ்வு, கோபம், வெறுப்பு, ஆத்திரம், பற்று ஆகிய தன்மைகளின் ஒலிவேற்றுமைகள் ஆறும் சண்முக தூலமாய் அமையும். கண், செவி, வாய், நாசி, மெய், உட்செவி என்னும் பொறிவாய் ஆறின் தலைப்பட்டு நிலவும்.

**சண்முக தூல இலக்கண அட்டக விரியின் விளக்கம்**

அரிபிரமேந்திராதி தேவர்கள் இருடிகள் அப்சரசுகள் விஞ்சையர்கள் ஆகியயெல்லோரும் தனக்கேவல் செய்ய ஆட்சி கொண்ட மாயா புத்திரனாகிய சூரபதுமன் கொண்ட பூதாகாரமான மாமரத் தோற்றமும் அவன் பொருட்டு ஆறுமுகக் கடவுள் தோன்றியவாறும் பரமேச்சுரனுடைய திருக்குமாரனென ஆடல் புரியும் ஆறுமுகச் சிவனார் முன்னிலையில் பிரமன் பிழைபட வேதமோதித் தளையுண்டவாறும் பிரமன் தளைப்பட்டடங்கிய பின் அவன் செய்யும் தொழிலை நாதத்தாற்றான் செய்த அறுமுகக்கடவுள் நாத தெய்வீகத்தை நாமும் பெற்றுய்யச் சண்முக தூலத்தின் இலக்கண விளக்கப் புரியட்டத்தை உரைக்கத் தொடங்கி மேற்கூறிய எல்லாவற்றிற்கும்

நாதவிளக்கத்தை இதுவரையுரைத்தபடியே நாதத்திற்கு உருவம் புரிய இலக்கண அட்டக விரியைச் சொல்லுகிறேம்.

**அத்தன மைத்தவு டம்பிரு கூறினுள்**
**சுத்தம தாகிய சூக்குமஞ் சொல்லுங்கால்**
**சத்த பரிச வுருவரச கந்தம்**
**புத்தி மனுங்காரம் புரியட்டகாயமே.**

என்ற தமிழாகம நியதிப்படி சண்முக தூலத்தை இலக்கண அட்டகத்தில் ஓசையால் உணரப் பெறும் பொழுது.

## இசை உரு ஒலியில் சுரம் தோன்றுதல்

**அதனை ஓசை அமைப்பின் உணரலிற்**
**சப்பலாற் கனியிற் சகார வொலியும்**
**வண்டின முரலலால் மலரில் ரிகாரமும்**
**கமரும் இயற்கையாற் காயிற் ககாரமும்**
**வாக்குத் தடைப்பட வாயூ றியற்கையாம்**
**மாமுன் னிலையில் மகார வொலியும்**
**விளமுன் னிலையில் விதிர்விதிர்ப் பெய்திப்**
**பயந்து பதறலிற் பகர வொலியும்**
**நான்ற வடிவாய் நழுவிச் சிறிது**
**சிறிதாய்த் தனித்தனி செல்லு நாள்யெனும்**
**தாறி னிடத்து தநிஎனும் ஓசையும்**
**ஆகச் சரிகம பதநி எனும்ஒலி**
**திகழ கானஞ் செறிதரு சுரமாம். (எ)**

## நாதம்

அதனை ஓசை அமைப்பின் உணரலில் = அந்தச்சண்முக, தூலத்தை ஒலி இயலின் நியதியால் உணரும் பொழுது சப்பலாற் கனியிற் சகார ஒலியும் = நாவாற் சுவைக்கும் கனிந்த பழப்புசிப்போசையில் – ச – என்ற ஓசையும் வண்டின முரலலால் மலரில் ரிகாரமும் = சுரும்பினம் மொய்த்துச் சிரற்றும் ஒலியால் – ரி – காரமும் கமரும் இயற்கையாற் காயிற் ககாரமும் = தொண்டையைக் கம்மி கமரச் செய்யும் தன்மையை யியல்பாகவுடைய

காயினுற் ககார வொலியும், வாக்குத் தடைபட வாயூறியற்கையாம் மாமுன்னிலையில் மகார வொலியும் = வாய்ப் பேச்சிற்கிடையூருக வாயில் நீர்சுரக்குமியல்பை முன்னிலைப் பாட்டிற் கொண்டு விளங்கும் மாவினிடத்து மகார வொலியும், விளமுன் னிலையில் விதிர்விதிர்ப் பெய்தி பயந்து பதரலிற் பகர வொலியும் = கடிப்பைத் தரும் விளத்தின் முன்னிலைப் பாட்டில் பதறிவிடவிடத்துப் பயப்படுமியலாற் பகார வொலியும், நான்ற வடிவாய் நழுவிச் சிறிது சிறிதாய்த் தனித்தனி செல்லு நாள் எனும் தாறினிடத்துத் தநி எனும் ஓசையும் = தொங்கு முகங் கொண்ட வுருவமும் உளதுபோல இலதாய்க் கொஞ்சங் கொஞ்சம் ஒவ்வொன்ருய்க் கழியும் நாளின் தன்மை கொண்டுள்ளதால் நாள் மலர் எனக் கூறப் பெறும் பூந்தாறினிடமாம் முன்னிலைப் பாட்டில் – த – என்னும் வலியவோசையும் – நி – என்னும் மெல்லொலியோசையுங் கொண்ட .தநி. என்னும் ஒலியும் = ஆக சரிகமபநி எனுமொலி திகழக்கானஞ் செறிதரு சுரமாம் = ஆகிய எல்லா ஒலிகளையுங் கூட்டிப் பார்க்கும் பொழுது சரிகமபதநி என்ற வொலி விளங்கிக் கானத்தின் சுரமாய்த் தோன்றும். இது நாதம்.

## நாதாந்தம்

இதை நாதாந்தமாய் பார்க்கும் போது சரிகமபதநி என்னும் சுரமாம் (பா அணியாகிய) பாணியிற் சார் அளி மொய்க்கும் தாமரை உருத்திரட் கணமாய் வீமம் தோன்றியவாறு காணப்பெறும்.

கானத்திற் ருேன்றும் சுரம் உட்டுளையுடைத்தாய் விள்ளும் இயல்புடைய தன்மைத்தால் தாமரை என்றும், வீ என்பது மலரைக் குறிக்கும் சொல்லாகையால் வீமன் என்றும் உருத்திரன் என்றும் ஆயின.

இவ்வியலானது நாதத்தன்மைத் திறத்திற்கிடமாகிய வெளியினிடத்துத் தோன்றக் கூடியதாகையாலும், அந்த ஆகாயம் நாதத்தன்மைத் திறம் விளங்கும் இயல்பாகிய ஒரே குணத்தை யுடைத்தலாலும் இதிற் சுரம் ஒன்றே தோன்றியது.

ஈண்டு சரிகமபதநி என்னும் ஒலி தோன்றியவாறும் அதற்குச் சுரம் என்றும் சரளி என்றும் பெயர் வந்தவாறும் வீமன் என்னும் உருத்திரன்

தாமரை மலராய் முருகன் திருக்கரத்தில் அமைந்தவாறும் தோன்றுதல் காண்க.

## இசை உருவின் பரிசிப்பில் திணையும் யாழும் தோன்றுதல்

அதனைப் பரிச அமைப்பின் உணரலிற்

**கனி என – உருட்சி வீழ்ச்சி உடையது குறிஞ்சி**
**மலர் என – நெருக்கமுடனே நெகிழ்ச்சியும் முல்லை**
**காய் என – காய்தல் வறத்தல் கடினமும் பாலை**
**மா என – அமைதல் தாழ்தல் ஆறுதல் மருதம்**
**விளம் என – அழுத்தல் விதிர்த்தல் அதிர்த்தலும் நெய்தல்**
**நாள் என – ஏற்றம் இறக்கம் இடைவெளி நழுவல் –**
**சிறிதாய்த் தனித்தனி செல்லல் நாள் முல்லை**
**ஆகக் குறிஞ்சி அலர்முல்லை பாலை**
**மருதம் நெய்தல் மலர்ந்த நாள்முல்லையும்**
**திண்மை யின்இயை ஐந்திணையும் யாழுமாம் (அ)**

## நாதம்

அதனைப் பரிச அமைப்பின் உணரலிற் கனியென உருட்சி வீழ்ச்சி உடையது குறிஞ்சி = சண்முக தூலத்தை இலக்கண அட்டகத்தில் இரண்டாவதாகிய தொட்டுணரும் நியதியாற் காணப் பெரும் பொழுது உருட்சியையும் வீழ்ச்சியையும் உடைய கனியின் இயலைப் பொருந்திய திணைப் பொருள் குறிஞ்சியாம் அதை ஒலி இயலின் இசைத்து நோக்கும் போது உருட்டுதல் கீழவிழத் தாழ்த்துதலாகிய செயலை யாழின் இசைக்கத் தொட்டுணர்ந்து காண்க. மலர் என நெருக்கமுடனே நெகிழ்ச்சியும் முல்லை = நெருக்கத்தையும் நெகிழ்ச்சியையும் உடைய மலரின் இயலைப் பொருந்திய திணைப் பொருள் முல்லை. அதை யாழினிடத்து நெருக்கியும் நெகிழ்த்தியும் தொட்டுணரும் செயல்புரியுங் கால் மலரின் ஓசையை உணரலாம். காய் என காய்தல் வறத்தல் கடினமும் பாலை = வெம்மையாய்ப் பசையற்று நெகிழ்ச்சியின்றிக் காணும் காயின் இயலைப் பொருந்திய திணைப் பொருள் பாலை. அதை தொட்டுணரும் நிகழ்ச்சிக் கருவியாகிய யாழினிடத்து

ஞெள்ளலாலும் நொய்தலாலும் கோறலாலும் உணராலம். மா என அமைதல் தாழ்தல் ஆறுதல் மருதம் = அமைந்து தாழ்ந்திருந்து ஆறுதலேயடையும் மாவின் இயலேப் பொருந்திய திணேப் பொருள் மருதமாம். அதைத் தொட்டுணரும் இயற்கருவியாகிய யாழினிடத்து மொய்யெனத் தாழ்த்தி மந்தமாய் வருடலின் உணரலாம். விளம் என அழுத்தல் விதிர்த்தல் அதிர்த்தலும் நெய்தல். அழுத்தல் விதிர்ப்புறச் செய்தல் அதிர்ச்சி விளேத்தலாகிய விளத்தின் இயலேப் பொருந்திய திணேப் பொருள் நெய்தலாம். அதைத் தொட்டுணரும் கருவியாகிய யாழினிடத்து அழுத்தியும் நடுங்கவசைத்தும் அதிர்ச்சி உண்டாகச் செய்தும் உணரலாம். நாள் என ஏற்றம் இறக்கம் இடைவெளி நழுவல் சிறிதாய்த் தனித்தனி செல்ல நாள் முல்லே = ஏற்றம் தாழ்வு தொடர்பற்று நிற்றல் உளதுபோல் இலதாதல் கொஞ்சங் கொஞ்சமாய் – ஒன்றொன்றுய்க் கழிதல் ஆய நாள்மலரின் இயலேப் பொருந்திய திணேப்பொருள் நாள் முல்லேயாம். அதை தொட்டுணரும் இயற்கருவியாகிய யாழினிடத்து ஏற்ற இறக்கம் கண்டங் கண்டமாய்த் தொனித்தல் ஒவ்வொன்றுய் ஒலிக்கச் செய்தல் ஆயவற்றுல் உணரலாம். ஆகக் குறிஞ்சி மலர் முல்லே பாலே மருதம் நெய்தல் மலர்ந்த நாண்முல்லேயும் திண்மையின் இயை ஐந்திணேயும் யாழுமாம். குறிஞ்சித் திணே மலர்முல்லேத் திணே பாலேத் திணே மருதத்திணே நெய்தற்றிணே நாண்முல்லேத் திணே குறிஞ்சியாழ், முல்லேயாழ், பாலேயாழ், மருதயாழ், நெய்தல்யாழ், நாள்முல்லேயாழ் ஆகத் திணே ஐந்து யாழ் ஐந்தும் சண்முக தூல பரிசிப்பிற் காணும் இது நாதம். (இதை நாதாந்தமாய்ப் பார்க்கும் பொழுது).

## நாதாந்தம்

இதை நாதாந்தமாய்ப் பார்க்கும் பொழுது ஐந்திணே யாழ்திறமாம் பா அணியாகிய பாணியில் வாளாயுதவுருத்திரட் கணமாய்ப் பவோற்பவம் தோன்றுதல் காணப் பெறும்.

திறம் என்னும் கூறுபாட்டியற் கருவி வாளாகையால் வாளாயுதமும் வாளானது பாய்ச்சி வாங்கும் தொழிற் காரணப் பொருளாகையால் அவ்வியலினேயுடைய பவோற்பவம் உருத்திரட் கணமும் ஆயின.

இவ்வியலானது வெளியில் உலவும் வளியின் தன்மைத் திறத்திற் ரேன்றியதாகையால் வெளியின் கூருகிய ஒலியுடன் பரிசத்தையும்– தரலாகிய இருவகைக் குணம் பொருந்தும் வளியின் இயற்கைப் படி யாழும் திணையும் தோன்றிற்று.

ஈண்டு சண்முக தூலத்தைத் தொட்டுணரும் திண்மையினியைந்த திணை ஐந்தும் தொட்டுணுர்ந்த வண்ணம் இசைத்துக் காணும் திறங்களையுடைய யாழ் ஐந்தும் அதில் பவோற்பவன் என்னும் உருத்திரன் வாளாயுதமாக முருகப் பெருமான் திருக்கரத்தில் அமைந்தமையும் தோன்றுதல் காண்க.

## இசை உருவின் பயில் தரு மெய்த் தோற்றமாம் பரதத்தில் தாளம் தோன்றுதல்

அதனை உருவ அமைப்பின் உணர

| | | |
|---|---|---|
| கனியிற் | = | சப்பிச் சுவைக்கும் சார்புடையது கிளி |
| மலரின் | = | உட்கடி கொண்டு ஊதும் வண்டு |
| காயின் | = | கனைக்குமியற்கையாற் கமருதல் என்னும் சப்புதற் பேதம் தவிர்க்கும் குதிரை |
| மாவின் | = | வாக்குத் தடையும் வாயூறியற்கையும் பொருந்தச் – ச – அசைபோடு மாடாடு |
| விளமென | = | அழுந்தி விதிர்த்து அதிர்த்துச் சம்பொற் கொட்ட மடித்துக் குதிக்குந் தவளை |
| நாள் என | = | நான்ற வடிவும் நடையுங் கொண்டு சப்பற விர்த்திரி தலிஞெலி செய்யும் இயற்கையுடையது எழில்கொள் யானை |

| | | | | |
|---|---|---|---|---|
| ஆகக் | கிள்ளை | வண்டச்வ | மாடாடு | |
| தவளை | யானையாய் | சாற்றும் | பிராணியும் | |
| சச்ச | புடமுட் | கடிசட் | பேதம் | |
| சாச | புடமும் | சம்பொற் | கொட்டம் | |
| சற்பிதா | புத்ரிக | தாள | வகையுமாம் | (௬) |

உ

*சிவமயம்*

# நாதம்

அதனை உருவ அமைப்பின் உணர கனியிற் சப்பிச் சுவைக்குஞ் சார்புடையது கிளி = சண்முக தூலத்தை இலக்கண அட்டகத்தில் மூன்றுவதாகிய வடிவ காட்சி நியதியாலுணரும் போது சப்பி சுவைக்கப்படும் சார்புடையது கனி அந்த செயற்பாட்டை தனதாய் கொண்ட பிராணி கிளி. மலரின் உட்கடி கொண்டு ஊதும் வண்டு = மலர்ச்சியால் உட்பக்கம் வாசனை தோன்றப் பொலிவு பெற்றுக் காணும் – பூ – அதன் இயற்பாட்டை தனதாய் கொண்டுள்ள பிராணி வண்டு. காயின் கனைக்கும் இயற்கையாற் கமருதல் என்னும் சப்புதற் பேதம் தவிர்க்குங் குதிரை = கனைக்கும் இயற்கையால் கமருதல் என்னும் சப்புதற் பேதத்தை உடையது காய் அவ்வியற்கை தனதாய் கொண்டுள்ள பிராணி குதிரை. மாவின் வாக்குத்தடையும் வாயூறியற்கையும் பொருந்தச் – ச – அசைபோடும் மாடு ஆடு = வாய்திறக்காது மவுனமுறும்படி வாயூறச் செய்யும் இயற்கையுடையது மா. அவ்வியற்பாட்டைத் தனதாய் கொண்டுள்ள பிராணி மாடு ஆடு. விளம் என அழுந்தி விதிர்த்து அதிர்த்துச் சம்பொற் கொட்டமடித்துக் குதிக்கும் தவளை = அழுத்தமும் நடுக்கமும் அதிர்ச்சியும் உண்டாக நடைமுறை நிகழ்ச்சியைக் கூவிச் சொல்லல் ஆம் இயற்பாட்டையுடையது விளம் அவ்வியற்பாட்டைத் தனதாய் கொண்ட பிராணி தவளை. நாள் என நான்ற வடிவும் நடையுங் கொண்டு சப்பறவிர்த்திரி தலிஞெலி செய்யும் இயற்கையுடையது எழில்கொள் யானை = இறங்குமுகம் கொண்ட வாட்டமும் செல்லுதலும் உடையதாய் சுவைத்தலின்றி யுடைபடுங்கால் ஒலிக்கும் தன்மையுடையது நாள் மலர். நாள் மலரின் இயற்பாட்டைத் தனதாய் கொண்ட பிராணி யானை. ஆகக் கிள்ளை வண்டச்சவமாடாடு தவளை யானையாய்ச் சாற்றும் பிராணியும் = கிளி வண்டு குதிரை மாடு ஆடு தவளை யானை ஆகிய பிராணியும் = கிளி வண்டு குதிரை மாடு ஆடு தவளை யானை ஆகிய பிராணிகளும், சச்சபுடமுட்கடி சட்பேதம் சாசபுடமும் சம்பொற் கொட்டம் சற்பிதா புத்ரிக தாளவகையுமாம் = சச்சபுடம் உட்கடி சட்பேதம் சாசபுடம் சம்பொற்கொட்டம் சற்பிதாபுத்ரீகம் ஆகிய தாள வகைகளும் ஆக சண்முகதூலம் பயில்தரு மெய் தோற்ற வுருவிற் காணப்பெறும். இது நாதம்.

உ

*சிவமயம்*

# நாதாந்தம்

இதை நாதாந்தமாய்ப் பார்க்கும் பொழுது பரதமென்னும் பயில்தரு மெய்த்தோற்றத் துழநியாம் தாளமென்னும் பாஅணியாகிய பாணியில் கேடையப்படை யுருத்திரட்கணமாய் காபாலம் தோன்றுதல் காணப்பெறும். தாளம் என்னும் அடிச்சுவட்டுப் படைக்கலம் கேடயம் ஆகையால் காக்கும் பலத்தையுடைய அக்கருவியுருவாய்க் காபாலம் என்னும் உருத்திரட் கணம் தோன்றப்பெற்றது.

இவ்வியலானது வெளிவளியை ஆதாரமாய்க் கொண்டு தோன்றும் தீயின் கூருகிய வுருவத்தைக் கொண்டுள்ளமையால் தேயுவின் தன்மைத் திறமாகிய ஓசை பரிசம் உருவம் ஆகியமூன்றிற்கும் சண்முக தூலம் பயில்தரு மெய்பிராணிகளும், தாள இலக்கண விளக்கத்தையுள்ளடக்கிய சச்சபுட முதலியனவும் ஆகிய மூன்றும் தோன்றின.

ஈண்டு சண்முக தூலத்தை காட்சி வடிவமாய்க் காணப்பெறும் பொழுது வண்டொடு கிள்ஊள வாசி மதயாஊன தவஊள தேனு ஒண்டிறல் ஆடென்றேழும் ஓதும் ஏழிசையின் ஓசை என்று ஒலி பற்றிய பெயர்த் தொகுதியிற் கூறியவாறு காணும் பிராணிகள் சண்முக தூலம் பயில்தரு மெய்தோற்றமாயவாறும் அத்தோற்றத் துழநி சச்சபுட முதலியன வாயவாறும் அவைகள் பரதத்திற்காதியாகிய தாள மாத்திரை நியதியைக் காட்டும் வாறும் தோன்றப் பெறுவதுடன் முருகப் பெருமானுடைய திருக்கரத்தில் உருத்திரன் அமைவுற்றவாறும் தோன்றுதல் காண்க.

## இசை உருவச் சுவைப்பில் அமைபுநய மென்னும் அபிநய இராகமாக கமகம் சுருதி லயம் சுத்தம் தாளம் ஏற்ற இறக்கம் தோன்றுதல்.

| | | | |
|---|---|---|---|
| அதஊன | சுவையின் | அமைப்பினு | ணரலிற் |
| கிள்ளி | கடித்து | அள்ளிமுத் | தங்கொள் |
| கனிவிற் | பிறக்கும் | கமகம் | ஏலச்சுவை |
| உள்ளுள் | நெகிழ்ச்சி | கொள்ளும் | வண்ணம் |
| முகமலர் | வுறவும் | அகவிதழ் | விரியவும் |
| இசைக்கும் | சுருதி | இசைமலர் | தேன்சுவை |

| | | | | |
|---|---|---|---|---|
| தட்ப | வெப்ப | மதாகப் | பிறையுற | |
| அமிதம் | புளிக்க | ஆடை | நெகிழ்தர | |
| ஆங்க | வீனம் | ஆகக் | காய | |
| மருவப் | பெருங்கா | மருவ | லியமாம் | |
| நேயங் | காயி | லியமாம் | நெய்ச்சுவை | |
| வேட்கை | நீங்க | மெய்பூ | ரிக்க | |
| அழலை | நீங்கி | மழலை | தோன்ற | |
| பசந்து | பச்சை | படரம் | மாவெனும் | |
| சூதத் | தின்பரி | சுத்தம் | பாற்சுவை | |
| பற்குறி | நகக்குறி | பதியத் | தத்தி | |
| ஒலியும் | மாஅ | துளங்கனி | கொள்ளச் | |
| சுவைத்த | லோசையிற் | றெம்நமச் | யெழ்எழ | |
| விளத்திற் | ரேன்றி | விளங்கு | தருனச் | |
| சொற்கட் | டெனும் | மாதுளங் | கனிச்சுவை | |
| ஏற்ற | மாய்ம | டலேற | அலரெழக் | |
| கண்ணு | டியிலே | காணத் | தலைசாய்த் | |
| திறங்கு | முகங்கொள் | ஏற்ற | இறக்கம் | |
| நாளிற் | பிறக்கும் | வாழைக் | கனிச்சுவை | |
| ஆக | ஏலம் | அலர்த்தேன் | நெய்பால் | |
| மாது | ளங்கனி | வாழைத் | தீங்கனிச் | |
| சுவையுங் | கமகம் | சுருதிலயம் | சுத்தம் | |
| தாளம் | ஏற்ற | ருழ்விச் | சரசமாம். | (ம) |

## நாதம்

அதனைச் சுவையின் அமைப்பின் உணரலிற் கிள்ளிக் கடித்து அள்ளி முத்தங் கொள் கனிவிற் பிறக்கும் கமகம் ஏலச்சுவை = சண்முக தூலத்தை இலக்கண அட்டகத்தில் நான்காவதாகிய சுவையின் அமைப்பின் உணருங்கால் கிள்ளி கடித்து அள்ளி முத்தங் கொள்ளும் வண்ணம் கனிந்த கனியின் அமைபுநய இராகத்துழநிக்கமகச் சுவைப் பொருள் ஏலம். உள்ளுள் நெகிழ்ச்சி கொள்ளும் வண்ணம் முகமலர்வுறவும் அகவிதழ் விரியவும் இசைக்கும் சுருதி இசைமலர் தேன் சுவை = பூத்துக் காணும் மலரின் அமைபு இராகத் துழநிச் சுருதி இவ்வமைபுநய இராகத்துழநிச் சுருதிச்

சுவைப்பொருள் தேன். தட்ப வெட்பமதாகப் பிறையுற அமிதம் புளிக்க ஆடை நெகிழ்தர அங்கவீனம் ஆகக் காய மருவப் பெருங்காமருவலி லயமாம் நேயங்காயிலயமாம் நெய்ச்சுவை = தட்பம் வெட்பம் ஆகவும் பிறையேறவும் சுவைவெறுக்கவும் ஆடை நெகிழ்ந்து அங்கவீனம் ஆகக் காய்க்கும் காயின் அமைபுநய இராகத்துழநி இலயம் இவ்வமைபுநய இராகத்துழநி இலயச் சுவைப் பொருள் நெய். வேட்கை நீங்க மெய் பூரிக்க அழலை நீங்கி மழலை தோன்றப் பசந்து பச்சை படரம் மாவெனும் சூதத்தின் பரிசுத்தம் பாற்சுவை வேட்கை நீங்கவும் மெய் பூரிப்படையவும் அழலை நீங்கி மழலைத் தோன்றப் பசந்து பச்சை படரவும் அம்மா என ஆறுதலடையக் காணும் சூதமாகிய மாவின் இயைபுநய இராகத்துழநிப் பரிசுத்தச் சுவைப் பொருள் பால். பற்குறி நகக்குறி பதியத் தத்தி ஒலியும் மாஅதுளங்கனி கொள்ளச் சுவைத்த லோசையிற் றெம் நம்ச்யெழ் எழ விளத்திற் றேன்றி விளங்குதருனச் சொற்கட்டெனும் மாதுளங் கனிச்சுவை = பற்குறியும் நகக்குறியும் பதியப் பொருந்தலால் தத்தி என்றெலிக்கும் ஒலியும் மாஅதுஉளங்கனி கொள்ளச் சுவைத்தல் தாளச் சொற்கட்டாகத் தொம் நம் ச்யெம் என்னும் ஒலி பிறக்கவும் பற்கடி கொள்ளும் விளத்தின் அமைபுநய இராகத்துழநி தாளம். இவ்வமைபுநய இராகத்துழநித் தாளச்சுவைப் பொருள் மாதுளங்கனி. ஏற்றமாய் மடலேற அலரெழக் கண்ணுடியிலே காணத் தலைசாய்ந்து இறங்கு முகங்கொள் ஏற்ற இறக்கம் நாளிற் பிறக்கும் வாழைக்கனிச்சுவை = மேலும் ஏற்றமாக மடலேறவும் அலரெழும்பவும் கண்ணுடியிலே காணவும் தலைகோண இறங்கு முகங்கொள்ளவும் நாள்பூத்துக் காணும் அமைபுநய இராகத்துழநி ஏற்ற இறக்கம் (ஆரோகண அவரோகணம்) இவ்வமைபுநய இராகத்துழநி ஏற்ற இறக்கச் சுவைப்பொருள் வாழைக்கனி. ஆக ஏலம் அலர்த்தேன் நெய்பால் மாதுளங்கனி வாழைத் தீங்கனிச் சுவையுங் கமகம் சுருதி லயம் சுத்தம் தாளம் ஏற்ற ருழ்வு இச்சரசமாம் = ஆக ஏலம் தேன் நெய்பால் மாதுளங்கனி வாழைக்கனி இவற்றின்இராகத்துழநி கமகம், சுருதி, லயம், சுத்தம், தாளம், ஏற்ற இறக்கம் இவைகளாய்ச் சண்முகதூல அமைபுநய இராகத்துழநிச் சுவைப்பொருள் தோன்றும். இதுநாதம்.

உ

*சிவமயம்*

# நாதாந்தம்

இதை நாதாந்தமாய் பார்க்கும் போது அமைபுநய மென்னும் அபிநயச் சரசமாம் பாஅணி என்னும் பாணியில் சவளப்படை உருத்திரட்கணமாய் சுரர் தோன்றுதல் காணப்பெறும்.

சரசம் வளமை சார்புறும் சவளத்தால் தோன்றப் பெறுவதால் சவளம் என்னும் ஆயுதவுருத்திர கணமாய் சார்ந்து வளைக்குந் தொழிலை யுடைய சுரர் தோன்றப் பெற்றது.

இவ்வியலானது வெளிவளி அங்கியை ஆதாரமாய்க் கொண்டு தோன்றும் அப்புவின் கூருகிய சுவையைக் கொண்டுள்ளதால் அந்த அப்புவின் தன்மைத் திறமாகிய ஓசை பரிசம் உருவம் சுவை நான்கிற்கும் அமைபுநயம் அதன் இராகம் அதன் துழநி அதன்சுவைப் பொருள் ஆகிய நான்கும் தோன்றப் பெற்றது.

ஈண்டு கூறப்பெற்ற சண்முகதூலச் சுவை நுகர்ச்சியில் பாலொடு தேன் கடாமே பகர்தயிர் நெய்யினேடே ஏலமே வாழையே தாடிமக்கனி யேழ் சுவைக்காம் என்று ஒலி பற்றிய பெயர்த் தொகுதியிற் கூறியவாறு ஏழிசைச் சுவைப் பொருள்கள் சண்முக தூல அமைப்பின்நய இராகத் துழநியிற் றேன்றியவாறும் அவ்விராகத்தின் அகமாக கமகம், சுருதி, லயம், சுத்தம், தாளம், ஏற்ற இறக்கம் முதலியனவும் அவ்விராகத்தின் புறமாக அமைபின் நயமென்னும் அபிநயமாம் சரசம் தோன்றியவாறும் காணப் பெறுவதுடன் அரன் என்னும் உருத்திரன் சவளம் என்னும் படைக்கலமாக முருகப் பெருமான் திருக்கரத்தில் அமைந்தவாறும் தோன்றுதல் காண்க.

## இசை உருவ மணநுகர்ச்சியில் பண் பூவாகத் தோன்றுதல்

**அதனை நறுமண வமைப்பினு ணரலிற்**
**கனியின் மலர்வு கொள்இனிய முருகன்**
**அணியுங் கடம்பிந் தளமாம் பண்பூ**
**மலரின் முல்லை கொள்வனி தைமாலாய்ப்**
**பொருந்தல் பியந்தை (பூயேய்ந்த) காந்தாரப் பண்பூ**
**காய்த லின்னியை வேய்மலர் வீரையாம்**
**பைரவி மகிழ்வது பஞ்சுரப் பண்பூ**

| | | | |
|---|---|---|---|
| மாவிடை | மரவிடை | மலர்வுறு | வன்சீர்க் |
| களிகொளிந் | திரனது | கௌசீகப் | பண்பூ |
| விளமுறல் | கண்டு | மேவி | நேயத் |
| தியையும் | நெய்தலின் | மலர் | வருணன் |
| பரிவுகொள் | வதுபழம் | பஞ்சுரப் | பண்பூ |
| நாணிக் | கவிழ்தரு | நாள்எனும் | புன்மையின் |
| மகிழ்வுறு | புன்னை | மலர்வு | கொள்ளும் |
| கண்ணன் | விழைவு | காந்தாரப் | பண்பூ |
| ஆகக் | கடம்பமலர் | முல்லை | வீரை |
| வஞ்சி | நெய்தல் | மலரொடு | புன்னையின் |
| பூவிந் | தளமும் | பூவேய்ந்த | காந்தாரம் |
| பஞ்சுரம் | கௌசிகம் | பழமைப் | பஞ்சுரம் |
| காந்தாரம் | என்பன | காணும் | பண்பூக்களாம் |

(௰௧)

சண்முக தூலத்தை இலக்கண அட்டகத்தின் ஐந்தாவதாகிய நறுமண அமைப்பின் உணரப் பெறும்பொழுது கனிகுலுங்குங் கானத்தையுடைய குறிஞ்சி நிலத்தில் சச்சபுடங்கொள் தத்தைகள் நெருங்கி கிள்ளிக் கடித்து அள்ள ஏலம்படு தருவின் மலர்ந்த இந்தளப் பண்பூவே கனியின் மலர்வுகொள் இனிய முருகன் அணியுங் கடம்பெனும் இந்தளமாம் பண்பூ.

மலர்செறி கானத்தையுடைய முல்லை நிலத்தில் உட்கடி கொண்டு ஊதும் வண்டுகள் உள்ளுள் நெகிழ்ச்சி கொள்ளும் வண்ணம் முகமலர்வுறவும் அகவிதழ் விரியவும் தேனுண் தருவின் மலர்ந்த பூவேய்ந்த காந்தாரமே மலரின் முல்லை கொள்வனிதை மாலாய்ப் பொருந்தும் பியந்தைக் காந்தாரப் பண்பூ.

காய்மிக நெருங்குங் கானத்தையுடைய பாலை நிலத்தில் கனைக்கு மியற்கையுங் கமரலும் வறட்சியாற் சப்பிதம் தேடித் தவிக்கும் குதிரைக் கவனத்தால் தட்ப வெட்பமதாகப் பிறையுற அமிதம் புளிக்க ஆடை நெகிழ்தர அங்கவீனமாகக் காய மருவப் பெறுங் காயமர்வு நெய்த்த தருவின் மலர்ந்த பண்பூவே காய்தலின் மலர்வேய்மலர் வீரையாம் பைரவி மகிழ்வுடைப் பஞ்சுரப் பண்பூ.

மாப்படர் கானத்தையுடைய மருத நிலத்தில் வாக்குத் தடையும் வாயூறியற்கையும் பொருந்தச் – ச – அசைபோடும் மாடு ஆடுகள் வேட்கை நீங்க மெய் பூரிக்க அழலை நீங்கி மழலை தோன்ற பசந்து பச்சை படரச் சூதமாகிய மா என்னும் பால்படு தருவின் மலர்ந்த பண்பூவே மாவிடை மரவிடை மலர்வுறு வன்சீர்க் களிகொளிந்திரனது கௌசிகப் பண்பூ.

விளம்படு கானத்தையுடைய நெய்தல் நிலத்தில் அழுந்தி விதிர்த்து அதிர்த்துச் சம்பொற் கொட்டம் அடித்துக் குதிக்குந் தவளைகள் பற்குறி நகக்குறி பதியத் தத்தி எழுமொலியும் மாதுளங் கனிகொள்ளச் சுவைத்த லோசையிற் றெம் நம்ச் யெம் எழ விளத்தில் நேயம் தோன்றி விளங்குதலுமாகிய மாதுளங்கனித் தருவின் மலர்ந்த பண்பூவே விளமுறல் கண்டு மேவி நேயத்தியையும் நெய்தலின் மலர்வருணன் பரிவுகொள்ளும் பழம் பஞ்சுரப் பண்பூ.

நாண்மலர் சாம்புங் கானத்தையுடைய முதிர்ந்த முல்லை நிலத்தில் நான்ற வடிவும் நடையும் கொண்டு சப்பறவிர்த்திரிதலின் ஒலி செய்யும் இயற்கை யுடைய மதமா ஏற்றமாய் அடலேற அலரெழவும் கண்ணுடியிலே காணவும் தலைசாய்ந்து இறங்கு முகங் கொண்டு அந்த ஏற்ற இறக்கமாகப் பெறும் வாழைக் கனித் தருவின் மலர்ந்த பண்பூவே நாணிக் கவிழ்தரு நாள் எனும் புன்மையின் மகிழ்வுறு புன்னை மலர்வு கொள்ளும் கண்ணன் விழையுங் காந்தாரப் பண்பூ.

ஆகக் கடம்பமலர், முல்லை, வீரை, வஞ்சி, நெய்தல் மலரொடு புன்னையின் பூவிந்தளமும், பூவேய்ந்த காந்தாரம் பஞ்சுரம் கௌசீகம் பழமைப் பஞ்சுரம் காந்தாரம் என்பன காணும் பண்பூக்களாம்.

கடம்ப மலர், முல்லை, வீரை மலர், வஞ்சி மலர், நெய்தல் மலர், புன்னை மலர், ஆகிய மலர்களின் மணத்தை முறையே கொண்டுள்ள இந்தளப்பண், பியந்தைக் காந்தாரப் பண், பஞ்சுரப் பண், கௌசிகப் பண், பழம் பஞ்சுரப் பண், காந்தாரப் பண், ஆகியவை சண்முக தூல மணங்கமழ் பண்பூந்தருக்களாக காணப்பெறும். இது நாதம்.

உ

*சிவமயம்*

# நாதாந்தம்

இதை நாதாந்தமாய்ப் பார்க்கும் போது பண்பூந் தருவாம் பாஅணி என்னும் பாணியில் குலிசாயுத உருத்திரட் கணமாய் ஈசானம் தோன்றுதல் காணப்பெறும்.

பண்பூ ஐவகைத் தோற்றம் பொலிவுடைத் தானவாறு குலிசாயுத வுருத்திரட் கணமாய் ஐம்முகச் சிவனுகிய ஈசானம் தோன்றப் பெற்றது.

இவ்வியலானது அருவம் அருவுருவம் உருவம் இவற்றின் அகலத்திற் சகளீகரித்துத் தோன்றும் சகமாம் பிரிதிவியின் கூருகிய கந்தத்தை ஆதாரமாகக் கொண்டு தோன்றுதலால் அப்பிரிதிவியின் தன்மைத் திறமாகிய ஓசை, பரிசம், உருவம், சுவை மணம் ஐந்திற்கும் சுரம், யாழ், தாளம், ராகம், பண் என்னும் ஐந்தின் இயலாய் விளங்கும் பண்பூ தோன்றலாயிற்று.

ஈண்டு கூறியவற்றுள் கால்கிளர் மௌவல் முல்லை கடம்பொடு வஞ்சி நெய்தல் மேலுள வீரை புன்னை விரும்பிய மணங்களேழாம் என்று ஒலிபற்றிய பெயர்த் தொகுதியிற் கூறியவாறு பண்ணிசை மணங்கமழ் பண்பூக்கள் தோன்றியவாறும் அதை இசைத்துணர்வதற்கு அந்தப் பண்பூத்தரு தருக்களையுடைய கானம் ஈதென்றும் நிலம் ஈதென்றும் அதைச் சார்ந்துள்ள உயிர்க்கணங்கள் ஈதென்றும் இவைகளனைத்தும் அஃறிணையாகக் கொண்டுயர்ந்த உயர்திணை ஈதென்றும் கூறியவாறு இசைத்துக் காணும் போது முறையே இந்தளம் பியந்தைக் காந்தாரம் பஞ்சுரம் கௌசிகம் பழம்பஞ்சுரம் காந்தாரம் ஆகிய பண்களும் அவற்றிற்குரிய சீர் யாழ் யாப்பு ராகம் அடி முதலியனவும் தோன்றுவதுடன் ஈசானன் என்னும் உருத்திரர் குலிசமென்னும் ஆயுதமாக முருகப்பெருமான் திருக்கரத்தில் அமைந்த வாறும் தோன்றுதல் காண்க.

சண்முக தூல மணத்தை விவரித்துரைத்த இவ்வியலுட் காணப்படும் பொருள்கள் அனைத்திற்கும் அடிப்படையாக வுள்ளது ஐந்திணைப் பொருளே அத்திணைப் பொருள் தானே இயங்கும் இயல்பின்றி வேறெரு பொருளால் இயக்குவிக்கப்பெறும். அவ்வாறியக்குவிக்கும் பொருள் இவற்றிற் கெட்டாத உயர்நிலையில் உள்ளமையால் அது உயர்திணைப் பொருளாக இவைகள்

அஃறிணைப் பொருள்களாயின. உதாரணமாகப் பார்க்கின் மலர்தலை உலகை மணமுறச் செய்வது உயர்நிலையிலுள்ள ஒளிமண்டலக் கூட்டமேயென்பதை யுணர்க. அவ்வாறே இசைஇயலில் ஐந்திணை நிலமாம் குறிஞ்சிமலர் முல்லை, பாலை, மருதம், நெய்தல், நாள்முல்லை ஆதியனவற்றிற்கு உயர்திணையாக முறையே முருகன், திருமால், காளி, இந்திரன், வருணன், கண்ணன் முதலிய தெய்வங்களும் இவர்களுக்குரிய பண்பூவாக ஏழிசை மலர்களும் இப்பண்பூவின் இசையாக முருகனுக்குக் கடம்பின் மணம் கமழும் இந்தளமும், பூயேய்ந்த காந்தையின் ஆர்வலஞகி மொல்லைகொள் திருமாலுக்கு முல்லை மணம் கமழ் பியந்தைக் காந்தாரமும் வெம்மையின் கடுமை தாழாமல் ப்பஎன துடித்துப் பதறும் சுரமாம் பஞ்சுரத்தை விரும்பும் பாலைக் கிழத்தியாகிய வீரைக்கு வீரை மணங்கமழ் பஞ்சுரமும், குற்றத்திற் றலைப்பட்டுத் தவிக்கும் இயல்பற்றிக் கௌசிகன் எனக் கூறப்படும் வன்சீரையுடைய இந்திரனுக்கு வஞ்சிமணங்கமழ் கௌசிகமும் நெய்த்து வளங்கொழிக்கும் இது பழமையில் பஞ்சுரமாயிருந்ததாம் எனவரும் உணர்வளிக்கும் வருணனுக்கு நெய்தல் மணங்கமழ் பழம்பஞ்சுரமும் காவுந்தாருமாம் காந்தாரத்தின் கண்ணன் றெனப் புன்மையை விழையுங் கண்ணனுக்கு புன்னை மணங்கமழ் காந்தாரமும் பண்பூ மணம் ஆயினவாறு உணர்க.

## இசை உருவப் புத்தித் தோற்றத்தில் பண்பாட்டு தோன்றுதல்

| | | | |
|---|---|---|---|
| புத்தம் | புதிதாம் | புதுமைத் | தோற்றம் |
| அமையும் | புத்தி | அமைப்பின் | உணரலிற் |
| சாயல் | சந்தம் | தனிப்பட | மெலிதல் |
| நிலையிற் | றளர்ந்து | நீள்வழி | நோக்கல் |
| திரிபறு | வண்ணந் | திகழ | அமைதல் |
| மாவும் | புள்ளும் | அமைய | நடைகொளல் |
| கனியில் | விளங்கிக் | காணும் | மாலை. |

| | | | |
|---|---|---|---|
| வெம்மை | பரந்து | விளங்க | நிழலற |
| ஆய்உடன் | றளைகொண் | டடல்பார் | உந்தி |
| தூக்கு | அசையும் | தொங்கும் | அலங்கலும் |
| மலரிற் | ரேன்றும் | மத்தி | யானம். |

உ
*சிவமயம்*

| | | | | |
|---|---|---|---|---|
| கணைகுர | லோசையும் | காஅல் | விடுஇயல் | |
| நெடிதும் | தெளிவும் | நிறைபூ | உலர்வும் | |
| காயிற் | றேன்றும் | காலைச் | சந்தி. | |
| மாவும் | புள்ளும் | மகிழ்ச்சியின் | முடுகு | |
| நடைவழிப் | பாடு | நயமும் | போதொடு | |
| காயு | நிழலுங் | காட்சியின் | மறைய | |
| வழிசெலல் | நோக்குதல் | மாவியல் | வைகறை | |
| செயல்நடை | முறையும் | செப்ப | லோசையும் | |
| எச்சரிக் | கைசெயும் | யாழ்சீர் | இயமும் | |
| அயலறி | யாமல் | அடங்கலுங் | குறிப்பில் | |
| உணர்த்தும் | நடைகொள் | ஒற்றும் | விளத்தின் | |
| விளங்கும் | முன்னிர | வென்னும் | ஏமம் | |
| காரெனு | நிழலுங் | கவினிள | வேனிற் | |
| காலமாம் | போதும் | காய்கொள் | கூதிரும் | |
| முன்பனி | யென்ன | மொழியும் | மாவும் | |
| வேனில் | முதிர்ந்து | விளங்கும் | விளமும் | |
| கடைப்படு | பின்பனிக் | காலப் | பருவமாம் | |
| ஆனியம் | அரசனை | யாகக் | கோவை | |
| தூது | மாலை | தொடையல் | கொள்ளவும் | |
| ஊடல் | தீர்ந்து | கூடல் | நிகழவும் | |
| தனித்தல் | நாள்மலர்ச் | சாமக் | காலம் | |
| ஆக | மாலை | யரும்பகல் | காலைச் | |
| சந்தி | வைகறை | அந்தியாம் | முன்னிரவு | |
| என்னும் | ஏமம் | இருள்நடுச் | சாமமும் | |
| சந்தக் | கலிவெண் | டளைபடு | தூக்கும் | |
| ஆசிரியத் | தொகை | யராக | வஞ்சியும் | |
| சூத்திர | நூற்பா | சொற்கட் | டளைக்கலி | |
| யாய | பருவ | மமைபண் | பாட்டுமாம் | (யஉ) |

உ

*சிவமயம்*

# நாதம்

புத்தம் புதிதாம் புதுமைத் தோற்றம் அமையும் புத்தி யமைப்பினுணரலிற் = சண்முக நூலத்தை இலக்கண அட்டகத்தின் ஆறுவதாகி புதுமைத் தோற்றத்தைத் தரா நிற்கும் புத்தியின் அமைப்பில் உணரப்பெறும் பொழுதும் சாயல் சந்தம் தனிப்படமெலிதல் நிலையிற்றளர்ந்து நீள்வழி நோக்கல் திரிபறு வண்ணம் திகழவமைதல் மாவும் புள்ளும் அமைய நடை கொளல் ஆகக் காணப்பெறும் பொழுது தெருட்சிப் பருவ புணர்தற் பண்பாட்டுப் பெண்டின் புத்தி தோற்றமாக குறிஞ்சி நிலத்து கார்கால மாலை பொழுதின் இயலிற் கனி காணப்பெறும்.

வெம்மை பரந்து விளங்க நிழலற ஆய்உடன்றலை கொண்டு அடல்பார் உந்தித் தூக்கும் அசையும் தொங்கும் அலங்கலும் ஆகக் காணப்பெறும் மணப்பருவ ஊடற் பண்பாட்டுடை ஆட்டியின் புத்தித் தோற்றமாக முல்லைநில இளவேனிற் காலத்து நண்பகற் பொழுதின் இயலில் மலர் தோன்றும்.

கனை குரலோசையும் காஅல்விடு இயல் நெடிதும் தெளிவும் நிறைபூ உலர்வும் ஆகக் காணப் பெறும் ருதுபருவக் கமித்தற் பண்பாட்டினளாகிய காந்தையின் புத்தித் தோற்றமாகப் பாலைநிலத்துக் கூதிர்காலக் காலைச் சந்திப் பொழுதின் இயலிற் காய்தோன்றும்.

மாவும் புள்ளும் மகிழ்ச்சியின் முடுகு நடைவழிப்பாடு நயமும் போதொடு காயு நிழலுங் காட்சியின் மறைய வழிசெலல் நோக்குதல் ஆகக் காணப்பெறும் சாந்தப் பருவ இரங்கற் பண்பாட்டு அணங்கின் புத்தித் தோற்றமாக மருத நிலத்து முன்பனிக் கால வைகறைப் பொழுதின் இயலில் மா தோன்றும்.

செயல்நடை முறையும் செப்பலோசையும் எச்சரிக்கை செயும் யாழ்சீர் இயமும் அயலறியாமல் அடங்கலுங் குறிப்பில் உணர்த்தும் நடைகொள் ஒற்றும் ஆகக் காணப் பெறும் பூப்புப் பருவப் பிரிதற் பண்பாட்டுத் தையலின் புத்தித் தோற்றமாக நெய்தல் நிலத்து முதிர்வேனிற் கால ஏமப்பொழுதின் இயலில் விளம் தோன்றும்.

கார் எனும் நிழலும் = ஈண்டு சொல்லப் பெற்ற கார்ப் பருவமாகிய நிழற்சீரும், கவினிளவேனிற் காலமாம் போதும் = அழகிய இளவேனிற் பருவமாகிய மலர்ச்சீரும், காய்கொள் கூதிரும் = கூதிர்ப் பருவமாகிய காய்ச்சீரும், முன்பனியென்ன மொழியும் மாவும் = முன்பனிப் பருவமாகிய மாச்சீரும், வேனில் முதிர்ந்து விளங்கும் விளமும் = முதிர் வேனிற் பருவமாகிய விளச்சீரும், கடைப்படு பின்பனிக்கால பருவமாம் = கடைப்படும்படி முற்பட்டுள்ள பின்பனிக்காலப் பருவமானது. ஆனியம் அரசனையாகக் கோவை தூது மாலை தொடையல் கொள்ளவும் = மற்ற பருவங்களெல்லாம் ரசனையில்லாததாக கோவையும் தூதும் மாலையும் தொடையலுங் கொள்ளும் படியாகவும், தனித்தல் நாள்மலர்ச் சாமக் காலம் = தனித்துக் காணப்பெறுஞ் படியாகவும், தனித்தல் நாள்மலர்ச் சாமக் காலம் = தனித்துக் காணப்பெறுஞ் சமைவுப் பருவத்து இருத்தற் பண்பாட்டுப் பிரியையின் புத்தித் தோற்றமாக நாள் முல்லை நிலத்துப் பின்பனிச் சாமப் பொழுதின் இயலில் நாள்மலர் தோன்றும்.

ஆகமாலை யரும்பகல் காலைச் சந்தி வைகறை அந்தியாம் முன்னிரவென்னும் ஏமம் இருள்நடுச்சாமமும் = கார்ப்பருவம் இளவேனிற் பருவம் முதிர்வேனிற் பருவம் கூதிர்ப்பருவம், முன்பனிப் பருவம், பின்பனிப் பருவம் ஆகிய பெரும் பொழுது ஆறினுட்டோன்றும் மாலை, நண்பகல், காலைச்சந்தி, வைகறை, ஏமம், சாமம் என்னும் சிறுபொழுதாறும் = சந்தக்கலி வெண்டளை படுதூக்கும் ஆசிரியத் தொகை யராக வஞ்சியும் சூத்திர நூற்பா சொற்கட்டளைக் கலியாய பருவமமை பண்பாட்டுமாம் = சந்தக் கலியும் வெண்டளை பயிலப் படுதூக்காகிய படுதூக்கும் தொகைப்பாடு கொள்ளும் ஆசிரியமும் அராகம் என்னும் முடுகிய லோசையாம் வஞ்சியும் நூற்பா என்னும் சூத்திரப்பாவும் சொல்லத்தகும் கட்டளைக் கலியும் ஆகியவைகளாகச் சண்முக தூலப் பருவப் பண்பாட்டுப் புத்தி தோன்றும் இது நாதம்.

## நாதாந்தம்

இதை நாதாந்தமாய்ப் பார்க்கும் போது காந்த உருவமாகிய புத்திப் பண்பாட்டுப் பாஅணியாம் பாணியில் மழுவாயுத உருத்திரட் கணமாய் ருத்திரம் தோன்றும்.

காந்தி உருவப் பண்பாட்டையுடையது மழு அதன் இயல் காய்தல் ஆகையால் உருத்திரனே உருத்திரட் கணமாய்த் தோன்றப் பெற்றது.

இவ்வியலானது ஐம்பூதங்களும் ஒன்றுகூடி இயங்கி இயக்கம் தரா நிற்கும் பூதியப் பொருட்பதியாம் இரவியின் கூருக வுள்ளமையால் அவ்விரவி சஞ்சாரம் செய்யும் இராசிகள் என்ன சிறுபொழுதாறும் பெரும்பொழுதாறும் மருவப்பெற்ற சந்தக்கலி வெண்டளைத் தூக்கு ஆசிரியம் வஞ்சி சூத்திரம் கட்டளைக்கலி ஆகிய பருவபண்பாட்டுகளாயின. மேலும் இரவி யூர்ந்து செல்லும் பரிமாக்கள் ஏழென்ன மேற்கொண்ட சீர் ஏழிற் பொருந்திய உதயாத்த மனமாகிய அந்தாதியைக் கொண்டு அடிகள் ஏழுடன் கூடிய எட்டில் ராசி யொவ்வொன்றிலும் கோட்கள் எட்டும் தலைப்பட்டுக் கூடுவன போன்று கூட பிரபந்தங்கள் தொண்ணூற்ருருகவாயின = முற்கூறி ய எண்ணேழைம் பத்தாறுடன் களவியல் நீத்த கற்பியலிற் றணித்த பருவப் பண்பாட்டு ஆறையும் பெருக்கக் கூடிய முன்னூற்று முப்பத்தாறுடன் ஓகாரம் பொருந்திய வெண்டுறையும் ஏகாரம் பொருந்திய செந்துறையும் ஐகாரம் பொருந்திய அம்மானையும் ஆகிய மூன்றையும் பெருக்க ஆயிரத்தெட்டுப் பண்பாட்டு ஆம்வாறுணர்க.

## இசை உருவ மனஅகங்காரத் தோற்றத்தில் ஏழு இசையும் பண்பிறக்கும் தானமும் யாப்பும் தோன்றுதல்

**அதனை மனவகங் காரத் துணரலிற்
பேதம் பேதமை பெருகு மடத்தின்
உட்கசி வெய்தும் உணர்ச்சிக் கனிபால்
உழைஇளி என்னும் ஓசை சிரம்நுதல்
இரண்டிற் கண்ணி னிடமாய்த் தோன்றும்.**

**மன்னென உயர்வு வழங்கிக் கையராய்த்
தாழுமங் கையராம் தன்மைக் கற்புடை
இயல்புப் பூவைபால் எய்தும் மலர்வு
கமழ்தலி னினிய கைக்கிளை யோசை
அண்ணமாம் மேற்புறத் தடர்செவித் தோன்றும்.**

உ
*சிவமயம்*

மடமை மேற்கொள் மடந்தைக் குணத்தால்
அச்சம் பெருக அஞ்சி யிஜலயென
மறையுங் காய்மை வசையிற் காரிகை
இயற்கையிற் றுத்த மெனுமொலி நாவிஜனப்
பற்றி வாயிட முற்றுத் தோன்றும்.

ஆர்வு இயையும் அரிவை இயல்பால்
நாணலில் மாஅதென நல்குங் கூச்சற்
ருர இசைமூக் கதனிற் ரேுன்றும்.

தெருட்சி கொள்ளத் தெரிதலி வியைபுடைத்
தெரிவை பயில்பு தேறி விறலியாய்
விளம்பலின் நெஞ்சு மிடற்றின் மெய்யிடமாய்
விளரி குரலிசை மேவித் தோன்றும்.

பெயரும் இளமைப் பிராயப் பருவம்
அயலறி யாம லாக்க வொன்றுபோற்
காட்டும் நாள்எனும் களவுகொள் நார்மையின்
அணரிற் செவியில் அடங்கும் ஓசையாய்
கைக்கிஜள என்னும் கனிவொலி தோன்றும்.

பேதை பெதும்பை மங்கை மடந்தை
அரிவை தெரிவை யரும்பே ரிளம்பெண்
பருவ மடங்கற் பச்ச நாணம்
பயிர்ப்பு களவிப் பாங்காம் கணங்கொள்
கன்னி பூவை காரிகை மாது
விறலி நாரியாய் விளங்கும் பெண்மையில்
உழைஇளி கைக்கிஜள துத்தந் தாரம்
விளரி குரல்இஜள மேவே ழிசையும்
முடிநுதல் அணரிமூக்கு உரம்மிட றுஅணம்
சார்ந்து கண்செவி வாய்மூக்கு உடல்உட்செவி
பற்றித் தஜளபடு பந்தன யாப்புமாம். (யங)

அதஜன மனவகங்காரத்துணரலில் = இந்த சண்முக தூலத்தை இலக்கண அட்டகத்தில் ஏழாவதும் எட்டாவதும் ஆகிய மன அகங்காரத்தின் இயலில் உணரப்பெறும் பொழுது = பேதம் பேதமை பெருகும் மடத்தின்

உட்கசிவெய்தும் உணர்ச்சியுடைய கன்னியின் எண்ணத் துடிப்பின் இயலில் கனிதோன்றும் பேதம் பேதமைப் பருவக்கை இதமாகவும் மடக்குணசங்கைக் கிதமாகவும் தோன்றும் பண்ணிசை பண்தானமாகிய சிரம்நுதல் சார்ந்து கண்களைப் பற்றி தளைகொண்டுள்ள கலிப்பாவும் தூங்கலோசையுமாக உழைஇளி என்னும் இசை கனியின் மனமாகவும் அகங்காரமாகவும் காணப்பெறும்.

மன்னென உயர்வு வழங்கிக் கையராய்த் தாழும் மங்கையராம் தன்மைக் கற்புடைய இயல்புப் பூவையின் எண்ணத் துடிப்பின் இயலில் மலர் தோன்றும் மங்கை பருவக்கை இதமாகவும் கற்புக் குணச் சங்கைக் கிதமாகவும் தோன்றும் பண்ணிசை பண்தானமாகிய அணரியைச் சார்ந்து செவியைப் பற்றித் தளைகொண்டுள்ள வெண்பாவும் விள்ளலோசையுமாக கைக்கிளை என்னும் இசை மலரின் மனஅகங்காரமாகக் காணப்பெறும்.

மடமை மேற்கொள் மடந்தைக் குணத்தால் அச்சம் பெருக அஞ்சியிலை என மறையுங் காய்மைத் தன்மையின் இழிதகையுடை யியல்புள்ள காரிகையின் எண்ணத் துடிப்பின் இயலில் காய்தோன்றும் மடந்தை பருவக்கை இதமாகவும் அச்சக் குணச்சங்கைக் கிதமாகவும் பண்ணிசை பண்தானமாகிய நாவைச் சார்ந்து வாயைப் பற்றி தளை கொண்டுள்ள அகவலும் ஏங்கலோசையுமாக துத்தம் என்னும் இசை காயின் மன அகங்காரமாகக் காணப்பெறும்.

ஆர்வு இயையும் அரிவை இயல்பால் நாணலில் மாஅதுஎன (மாதுஎன) நல்குங் கூச்சத்தையுடைய மாதின் எண்ணத் துடிப்பின் இயலில் மா தோன்றும். அரிவைப் பருவக்கை கிதமாகவும் நாணகுணச் சங்கைக் கிதமாகவும் தோன்றும் பண்ணிசை பண்தானமாகிய மூக்கைச் சார்ந்து கவிக்குந்தளை கொண்டுள்ள வஞ்சியும் துள்ளலோசையுமாக தாரம் என்னும் இசை மாவின் மனவகங்காரமாகக் காணப்பெறும்.

தெருட்சி கொள்ளத் தெரிதலின் இயைபுடைத் தெரிவை பயில்பு தேறி விறலியாய் விளம்பும் எண்ணத் துடிப்புன் இயலில் விளம் தோன்றும் தெருட்சி பருவக்கை இதமாகவும், பயிர்ப்புக் குணச்சங்கைக் கிதமாகவும் தோன்றும் பண்ணிசை பண்தானமாகிய நெஞ்சு கழுத்து இதனைச் சார்ந்து

மெய்யைப் பற்றி தளைகொண்டுள்ள முதிர்ச்சி யாசிரியமும் கூவலோசையுமாக விளரிகுரல் என்னும் இசை விளத்தின் மனஅகங்காரமாகக் காணப்பெறும்.

பெயரும் இளமைப் பிராயப் பருவம் அயலறியாமல் ஆக்க ஒன்றுபோல் காட்டும் நாள் எனும் களவுகொள் நார்மையையுடைய நாரியின் எண்ணத்துடிப்பின் இயலில் நாள்தோன்றும் பேரிளமைப் பருவக்கை இதமாகவும் களவுக்குண சங்கைக் கிதமாகவும் தோன்றும் பண்ணிசை பண்தானமாகிய அணரியைச் சார்ந்து உட்செவியைப் பற்றி தளை கொண்டுள்ள முதிர்ந்த வெண்பாவும் தீர்ந்த விள்ளலோசையுமாக கழிகைக்கிளை என்னும் இசை நாண்மலரின் மனவகங்காரமாகக் காணப்பெறும்.

பேதை பெதும்பை மங்கை மடந்தை அரிவை தெரிவை யரும்பேரிளம்பெண் ஆகிய பருவங்களும் கன்னி பூவை காரிகை மாது விறலி நாரியாகிய பெண்மையும் ஆகத் தோன்றும் சண்முக தூல மனவகங்காரக் கீதசங்கீதப் பண்ணிசையாகிய உழைஇளி கைக்கிளை துத்தம் தாரம் விளரிகுரல் இளை ஆகிய ஏழிசையும் முடிநுதல் அணரி நாமூக்கு உரம் (நெஞ்சு) மிடறு அனம் முதலிய பண்தானச் சார்பு கொண்டு கண் செவி வாய், மூக்கு, உடல், உட்செவி ஆகிய உறுப்பை தளை கொண்ட யாப்பொலியாக சண்முக தூல மன அகங்கார இயமானன் நிற்கும். இது நாதம்.

## நாதாந்தம்

இதை நாதாந்தமாய்ப் பார்க்கும் போது ஈண்டு சுரமுதலாகக் கூறப்பெற்ற – ச – அகத்து இயமாகிய சகத்திய இசைவுச் சஷ்டிப் பா அணியாம் பாணியில் கொடி பாசம் அம்பு வில் தண்டம் வேல் ஆகிய உருத்திரட் கணமாய் முறையே விசயம் நீலலோகிதம் மாதேவம் சங்கரம் சௌமியம் சக்தி முதலியன தோன்றுதல் காணப்பெறும்.

சாகத்தியச் சவுசஷ்டியில் கைஇதம் பண்ணிசைக்குரிய விசைய உருத்திரட் கணமே கொடியாகவும் சங்கைக் கிதமாய்ப் பந்தனம் புரி பாசமே நிலவுல கேத வுருத்திரட் கணமாயும் கண்ணிற்று தூங்கலோசையாய்க்

கலித்தல் தளைப்பட செய்யும் வேதையுடைய அம்புரு வுருட்திரட் கணமே மாதேவமாகவும் செவியினிடத்து விள்ளலோசையாய் வெளிற்றளைப்பட செய்யும் வேதையையுடைய வில்லின் உருட்திரட் கணமே சங்கரமாகவும் வாணினிடத்து கூவலோசையாக அகவற்றளைப்படச் செய்யும் வேதை தருதண்டுதலாம் தண்டமே சவுமிய வுருத்திரட் படைக்கலங்களும் பதினொரு பாஅணியம் பாணியில் அமைய மூக்கினிடத்துத் துள்ளலோசையாய் வன்சீர் தளைப்பட செய்யும் வேதையை யுடைய வெல்வி நெடிதுடைய வேல் ஆயுதமாம் சத்தமே சக்திவேல் ஆகவும் ஆகப் பண்ணிருபாணியில் (இசைவுச் சஷ்டியே சவுசஷ்டி என்று வழங்கப் பெறுகிறது). இசைவுச் சஷ்டி உருத்திரட் சத்திப் படைகலங்கள் தோன்றப் பெற்றன.

இவ்வியலானது பூதபூதியப் பொருட் பதியைச் சார்ந்த பாசமென்ன விளங்கும் மதியின் கூருக வுள்ளமையால் மதியமானது மித்திரனை விழைதலாற் ருேன்றிய ஏழென்ன ஏழிசை தோன்றலாயிற்று. இவ்வேழ்வகையாகிய பாசத்தால் உரம்பெறும் பாசுரத்தாற் பிணிக்கப் பெற்ற நிலையம் எண்வகையாக அதனுள் ஒருமைப்பாடு உரிமை உடைத்தாதல் பற்றி அகங்காரகனுகப் பசுபாசத்தாற் கட்டுண்டு முற்கூறிய ஏழில் எண்குணம் பெற்று கண் செவி வாய் மூக்கு உடல் உட்செவி இவற்ருல் பந்தித்த பந்தனம் என்னும் யாப்பாம் யாக்கை பெற்று ஒருருவாய் தோன்றலாயிற்று.

ஈண்டு கூறப்பெற்ற சண்முகதூல மனவகங்காரத் தோற்றத் தெளிவு தலைவியின் பருமாயும் குணமாயும் பெண்மையாயும் தோன்ற இவ்வகத் துறையில் ஏழிசையும் ஏழிசைப் பண்தானமும் அப்பண்தானச் சார்புபற்றித் தளை கொண்ட யாப்பும் தோன்றியவாறு காண்க.

## இசை உருவான கீதக் கண்ணுடியில் தமிழ்க் கடவுளாக முருகவேளின் உருவப் படிவம் தோன்றுதல்.

| | | | |
|---|---|---|---|
| ஐந்தன் | மைத்திறம் | அதின்முக் | கரணம் |
| ஆகிய | எட்டாய் | அமைந்த | சூக்க |
| இலக்கணம் | எட்டின் | விளக்கத் | துட்படு |
| நான்குங் | கூடு | முன்னுன் | குபாணியில் |

உ
*சிவமயம்*

| | | | |
|---|---|---|---|
| உருத்திரட் | கணம்பதி | ஞென்றும் | அடங்கலுக் |
| காதி | சத்தி | யருள்வே | லாயுதம் |
| என்னும் | நாதமா | யிலங்கு | சத்தியும் |
| விளங்க | மாயை | விரியீ | டழிந்து |
| சத்தியால் | அலகுடைத் | தாகிக் | கவிதை |
| கவியத் | துறைகொளக் | களன்று | யாழ்சீர் |
| யாப்புறக் | கூவ | லாட்சி | செய்யுள் |
| ளாக்கவம் | போத | ரங்க | மறியப் |
| படுவகை | செய்யும் | பாட்டுடைத் | தாக |
| விளங்குசீர்ச் | சேவலாய் | மேவு | பதாகையும் |
| வில்லா | சுகமென | விரைதல் | யாழ்த்தொகை |
| யொப்ப | நடத்த | லொருகான் | முடங்கி |
| நிற்றல் | நொண்டியாய் | நிலத்தில் | மண்டல |
| வளையமாய் | ஆடி | வருதல் | வரிஎழக் |
| கிண்டல் | அம்மாளையாய்த் | தண்டா | தெழும்பித் |
| தாவல் | படல்நெடி | தாகத் | தோகை |
| விரித்துத் | திரிவிளை | யாட்டு | நடைகொள் |
| அடியுடைத் | தாகிய | அற்புத | மாமயில் |
| வாகன | மும்அமை | வாக | விவ்வாரும் |
| சண்முக | தூலமும் | சதுர்முக | சூக்கமும் |
| புரியட் | டகாய | விரியும் | அருள்செயும் |
| ஆறு | முகமும் | ஆறிரு | புயமும் |
| வேலு | மயிலும் | விளங்குசெஞ் | சேவலும் |
| முத்தமிழ் | நான்மறைச் | சத்திய | வேத |
| மணங்கமழ் | பாதமும் | வாய்மை | தவிராது |
| ஓதுவார் | ஓத | உயர்நல | மெல்லாம் |
| இசைபெறத் | தருபண் | ணிலக்கணச் | சூக்கமாய் |
| தண்டமிழ் | மறைதெரி | சண்முக | நாதனுல் |
| மண்டல | மெல்லாம் | வளம்பெற | நிறைந்தது (௩௪) |

ஐந்தன்மைத் திறம் அதின்முக் கரணம் ஆகிய எட்டாய் அமைந்த சூக்க இலக்கணம் எட்டின் விளக்கத்துட்படு நான்குங் கூடுமுன் ஞன்குபாணியில் = அருவம் அருவுருவம் உருவம் அகளம் சகளம் ஆகிய ஐம்பூதங்களும் இவற்றின் தன்மைக் கூறுபாடுகள் பதினைந்தும்

அதிற்ருேன்றும் மனுே வாக்குக் காயம் ஆகிய கரணங்கள் மூன்றும் கூடிய எட்டின் தன்மைகள் விளங்கும் படியாக விளக்கிக் கூறப்பட்டதினுள் தோன்றிய நான்குங் கூடிய பன்னிரண்டு பாஅணியாகிய பாணியில் = உருத்திரட் கணம்பதி ஞென்றும் அடங்கலுக் காதி சத்தியருள் வேலாயுதம் என்னும் நாதமாய் இலங்கு சத்தியும் விளங்க = ஈண்டு கூறப்பட்ட சண்முக தூலப் புரியட்ட காய இலக்கண விளக்க இசைவுச் சஷ்டியின் வடிவத் தொகுதிக் கூட்டம் ஆகிய உருத்திரட் கணம் பதிஞென்றும் அனைத்திற்கும் முதன்மையாகிய நாதவுருவாம் சத்தி என்னும் சத்தம் உதவும் சத்திவேல் ஆகிய வேலாயுதம் ஆம் நாதசத்தியும் துலங்கலால் = மாயை விரியீடழிந்து = மாவின் இயைபுள்ள மாயையின் படர்ச்சியானது ஒருங்கே யழிந்து = சத்தியால் அலகுடைத்தாகி = வேலாயுதம் என்னும் நாதமாம் ஏழாற் கூறுபடுத்தப்பட்டு கவித்தலை மேற்கொள்ளும் கவிதையும் தழுவிக் கவிக்கும் கவியும் – து எனவுதறித் தள்ளியுறையும் துறையும் சினங்கொண்டு அழுத்தந் திருத்தமாய்க் கூவலாகிய யாழ்சீர் யாப்பும் ஆளுகைக்குரிய செம்மையாம் வெற்றிக்குட்படுத்தும் செய்யுளும் ஆம்போது அரங்கமறியச் செய்யலாம் அம்போதரங்கமும் இவ்வகையின் மேற்கொண்ட பாட்டையுடைய பாட்டும் கொண்டெழு சீரையுடைய சேவலாய்ப் பதயாக்கை வுருவமாகிய சேவற்கொடியின் இயலாகிய நாதாந்தத்தின் சீர் ஒன்றிற் கவிதையும் இரண்டிற் கவி மூன்றில் துறையும் நான்கில் யாழ்சீர் யாப்பும் ஐந்திற் செய்யுளும் ஆறில் அம்போதரங்கமும் ஏழிற் பாட்டும் ஆக நாதம் தோன்றும்.

வில்லா சுகமெனவிரைதல் = வில்லினின்றும் விடுபட்ட அம்புபோல் விரைந்து செல்லல் = யாழ்த்தொகை யொப்ப நடத்தல் = யாழ் நரம்பு தெரித்தாற் போல் நடத்தல் ஒருகால் முடங்கி நிற்றல் = நிலத்தின் மண்டல வளையமாய் ஆடிவருதல் – நிலத்தில் மண்டல வடிவமாய் நடஞ்செயதல் = வரி எழக் கிண்டல் = வரி எழும்பும் படியாகக் கிண்டுதல் அம்மானையாய்த் தண்டாதெழும்பித் தாவல் = அம்மானையாய்த் தண்டாது தாவுதல் = படல் நெடிதாகலாம் பாடல் ஆக = தோகை விரித்து விளையாடி நடைகொள் அடியுடையத்தாகிய அற்புத மாமயில் வாகனமும் அமைவாக = கலாபத்தை

விரித்து விளையாடி நடைகொள்ளும் அடிகளையுடைய அற்புதமான மயில்வாகனமும் பொருந்திக் காணப்பெறும் நாதாந்தத்தில் = அடி ஒன்று விலாசம், இரண்டு யாழ்த்தொகை (எதுகை), மூன்று சிந்து, நான்கு நிலமண்டிலம், ஐந்து வரி, ஆறு அம்மானை, ஏழு பாட்டு ஆக நாதம் தோன்றும். இவ்வாறும் சண்முக தூலமும் சதுர்முக சூக்கமும் ஈண்டு சுட்டிக் காட்டப் பட்டபடி சண்முக தூலமும் சதுர்முக சூக்கமும் = புரியட்ட காய விரியும் = புரியும் படியாகச் சொல்லிய அட்ட இலக்கண விரியும் இந்த நாதாந்தத்தில் நாதவுருவாய்த் தோன்றிய அருள் செயும் ஆறுமுகமும் ஆறிருபுயமும் வேலு மயிலும் விளங்கிக் காணும் சேவற்கொடியும் முத்தமிழ் நான்மறைச் சத்திய வேதமணங்கமமும் திருப்பாதமாகிய பதமும் வாய்மை தவிராது ஓதுவார் ஓத உயர்நலங்களெல்லாம் இசைபெறத் தரு பண்ணிலக்கணச் சூக்கமாக தண்டமிழ் மறைத் தெளிவின் வடிவில் படிவமாய்த் திகழும் சண்முக நாதனுடைய அருளால் மண்டலமெல்லாம் வளம்பெற நிறைவு பெறுகிறது.

இவ்வியற் றெுகுதியானது புரியட்ட காயத்தின் தோற்ற வொடுக்கத்திற்கு முதற்பொருளாகிய சுத்தப் பிரமத்தின் இயலிற் றேன்றிய படியால் பூத பூதியத் தன்மைத் திறத்தியற் கரணத் தொகுதிக் கூட்டங்களை எல்லாம் தனக்கு அணியெனக் கொண்டு நடு நாயகமாய் விளங்கும் – சு – பிரம – அணியாம் சுப்பிரமணியம் தமிழ்க் கடவுளாய்த் தோன்றலாயிற்று.

**“ஆறு அந்தங்களில் ஒன்றுகிய” “நாதாந்தம் என்னும்”**
**“ பண்ணிசை இலக்கண விளக்கச் சூக்கம்”**

மூலமும் உரையும்
முகிழ்ந்தது.

உ
*சிவமயம்*

## நான்காவது சூத்திரமும் விளக்கமும்

| | | | |
|---|---|---|---|
| ஈச்சுர | தத்துவத் | தியைந்து | தோன்றும் |
| சண்முக | தூல | முன்னிலை | யதனில் |
| கலித்த | லோசை | கண்ணிற் | றூங்கவும் |
| வெளிரிசை | செவியில் | விள்ள | லாகவும் |
| அகவல் | ஓசைவாய் | அதனில் | ஏங்கவும் |
| வன்சீர் | பிரமா | மறையோ | துதலில் |
| விட்ட | லக்கணமும் | விடாத | லக்கணமும் |
| விட்டு | விடாத | விலக்கண | மும்வரச் |
| சதுர்முக | வேதன் | றளைப்படும் | என்றது |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| கலிப்பா | – | கண் | – | தூங்கலோசை | – | விட்டலக்கணம் |
| வெண்பா | – | காது | – | விள்ளல்லோசை | – | விடாதலக்கணம் |
| அகவற்பா | – | வாய் | – | ஏங்கலோசை | – | விட்டுவிடாதலக்கணம் |
| வஞ்சிப்பா | – | மூக்கு | – | துள்ளல்ஓசை | – | வன்சீர்பிரமா |
| அகவற்பா | – | வாய் | – | கூவலோசை | – | விட்டுவிடாதலக்கணம் |
| வெண்பா | – | காது | – | விள்ளல்ஓசை | – | விடாதலக்கணம் |

கலிப்பா
வெண்பா
அகவற்பா
வஞ்சிப்பா

ஆகிய நான்கும் சதுர்முக சூக்கம்

சிவமயம்

அரிஓம் நன்ருக குரு வாழ்க குருவே துணை

**பண்ணிலக்கணச் சூக்கவுரைக் குறிப்பு**

**பண்ணிலக்கணச் சூக்கச் சந்திரிகை**

சதுர்முகன் சூக்கமாய்த் தளைபடச் செய்து
பண்சார் பாற்பிர பஞ்சத் தொழில்செயும்
சண்முக தூலம் இன்னதாம் எனப்
புரிய அட்ட விரியாய் உரைத்தது.

| பண் | க<br>ஓசை | உ<br>பரிசம் | ங<br>உருவம் | ச<br>ரசம் | ரு<br>கந்தம் | கா<br>புத்தி | எ<br>மனம் | அ<br>அகங்காரம் | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| கனி | ச | குறிஞ்சி | கிளி | ஏலம் | கடம்பு | மாலை | உழை, இளி | சிரம், நெற்றி | கண் | கலி |
| மலர் | ரி | முல்லை | வண்டு | தேன் | முல்லை | உச்சி | கைக்கிளை | அண்ணம் | செவி | வெண் |
| காய் | க | பாலை | குதிரை | நெய் | வீரை | சந்தி | துத்தம் | நாவு | வாய் | அகவ – ஆசிரிய இயற்சீர் |
| மா | ம | மருதம் | ஆடுமாடு | பால் | வஞ்சி | காலை | தாரம் | நாசி | மூக்கு | வஞ்சி |
| விளம் | ப | நெய்தல் | தவளை | மாதுளை | நெய்தல் | ஏமம் | விளரிகுரல் | நெஞ்சு மிடறு | மெய் | அகவல் – ஆசிரிய இயற்சீர் |
| நாள் | த.நி | முல்லை | யானை | வாழை | புன்னை | சாமம் | கைக்கிளை | அண்ணம் | செவி | வெண் |

உ

*சிவமயம்*

அரிஓம் நன்றாக குரு வாழ்க குருவே துணை

| | | | |
|---|---|---|---|
| ஐந்தன் | மைத்திறம் | அதின்முக் | கரணம் |
| ஆகிய | எட்டாய் | அமைந்த | சூக்க |
| இலக்கணம் | எட்டின் | விளக்கத் | துட்படு |
| நான்குங் | கூடுமுந் | நான்கு | பாஅணி |

௧. சுரம்

௨. யாழ்

௩. தாளம்

௪. சரசம்

௫. பண்பு

௬. பண்பாடு

௭. பண்ணிசை

௮. பண்தானம்

௯. கலிப்பா

௰. வெண்பா

௰௧. அகவல்

௰௨. வஞ்சி

| | | | |
|---|---|---|---|
| உருத்திரட் | கணம்பதி | ஞென்றும் | அடங்கலுங் |
| காதி | சத்தி | யருள் | வேலாயுதம் |
| என்னும் | நாத | மாய்இயங் | குசத்தியும் |
| விளங்க | மாயை | விரியீ | டழிந்து |
| சத்தியால் | அலகுடைத் | தாகும் | என்றது. |

சீர்

௧. கவிதை

௨. கவி

௩. துறை

௪. யாழ்சீர்யாப்பு

௫. செய்யுள்

௬. அம்போதரங்கம்

௭. பாட்டு

அடி

௧. விலாசம்

௨. யாழ்த்தொகை

௩. நொண்டி

௪. நிலைமண்டிலம்

௫. வரி

௬. அம்மானை

௭. பாடல்

உ

*சிவமயம்*

# சண்முக தூல மன அகங்காரக் கீதசங்கீதப் பண்ணிசைச் சவுசஷ்டிப் பாணிவிளக்கம்

| | | | |
|---|---|---|---|
| (கனி) | பருவம் | பேதை பெதும்பை | கீதம் |
| | குணம் | மடம் | சங்கீதம் |
| | பெண்மை | கண்ணி*கனி | பண்ணிசை |
| | இசை | உழை இளி | தூங்கலோசை |
| | சார்பு | சிரம் நுதல் | பண்தானம் |
| | தளை | கண் | கலிப்பா |
| (மலர்) | பருவம் | மங்கை | கீதம் |
| | குணம் | கற்பு | சங்கீதம் |
| | பெண்மை | பூவை*மலர் | பண்ணிசை |
| | இசை | கைக்கிளை | விள்ளல்லோசை |
| | சார்பு | அணரி | பண்தானம் |
| | தளை | செவி | வெண்பா |
| (காய்) | பருவம் | மடந்தை | கீதம் |
| | குணம் | அச்சம் | சங்கீதம் |
| | பெண்மை | காரிகை*காய் | பண்ணிசை |
| | இசை | துத்தம் | ஏங்கலோசை |
| | சார்பு | நாவு | பண்தானம் |
| | தளை | வாய் | அகவல் |
| (மா) | பருவம் | அரிவை | கீதம் |
| | குணம் | நாணம் | சங்கீதம் |
| | பெண்மை | மாது*மா | பண்ணிசை |
| | இசை | தாரம் | துள்ளல் ஓசை |
| | சார்பு | மூக்கு | பண்தானம் |
| | தளை | கவித்தல் | வஞ்சி |
| (விளம்) | பருவம் | தெரிவை | கீதம் |
| | குணம் | பயிர்ப்பு | சங்கீதம் |
| | பெண்மை | விறலி*விளம் | பண்ணிசை |
| | இசை | விளரி குரல் | கூவலோசை |

உ
*சிவமயம்*

| | | | |
|---|---|---|---|
| | சார்பு | நெஞ்சு மிடறு | பண்தானம் |
| | தளை | மெய் | முதிர்ந்த இயற்பா |
| (நாள்) | பருவம் | பேரிளம்பெண் | கீதம் |
| | குணம் | களவு | சங்கீதம் |
| | பெண்மை | நாரி*நாள் | பண்ணிசை |
| | இசை | பெயர்ந்த கைக்கிளை | பெயர்ந்த விள்ளல் |
| | சார்பு | அணரி | பண்தானம் |
| | தளை | உட்செவி | முதிர்ந்த வெண்பா |

உ

சிவமயம்

## பண்ணிலக்கணச் சூக்க விளக்க உரைக் குறிப்பு

**(சண்முக தூலப் புரியட்டச் சஷ்டிச் சவுசஷ்டிப் பாணிப் படைக்கல உருத்திரட்கணம்)**

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| சாரளி | -- | சுரம் | -- | தாமரை | -- | வீமம் |
| திறம் | -- | யாழ் | -- | வாள் | -- | பவோற்பவம் |
| பரதம் | -- | தாளம் | -- | கேடயம் | -- | காபாலம் |
| அபிநயம் | -- | சரசம் | -- | சவளம் | -- | அரர் |
| தரு | -- | பண்பு | -- | குலிசம் | -- | ஈசானம் |
| காந்தருவம் | -- | பண்பாட்டு | -- | மழு | -- | ருத்திரம் |
| கீதம் | -- | பண்ணிசை | -- | கொடி | -- | விசயம் |
| சங்கீதம் | -- | பண்தானம் | -- | பாசம் | -- | நீலலோகிதம் |
| தூங்கலோசை | -- | கலிப்பா | -- | அம்பு | -- | மாதேவம் |
| விள்ளல் லோசை | -- | வெண்பா | -- | வில் | -- | சங்கரம் |
| கூவலோசை | -- | அகவல் | -- | தண்டம் | -- | சௌமியம் |
| துள்ளலோசை | -- | வஞ்சி | -- | வேல் | -- | சக்தி |

| சண்முகதூல | நிலக் | காலப் | பொழுதுப் | பருவப் | பண் | பாட்டு | ஆ | யிழை |
|---|---|---|---|---|---|---|---|---|
| கனி | குறிஞ்சி | கார் | மாலை | தெருட்சி | புணர்தல் | பெண்டு | கடைமணி, சரிமணி | கோவை |
| மலர் | முல்லை | இளவேனில் | நண்பகல் | மணம் | ஊடல் | ஆட்டி | உரு | மாலை |
| காய் | பாலை | கூதிர் | காலைச்சந்தி | இருது | கமித்தல் | காந்தை | குச்சி, குவாலை | ஆனியவரசனை |
| மா | மருதம் | முன்பனி | வைகறை | சாந்தம் | இரங்கல் | அணங்கு | ஏத்தனம் | தூது |
| விளம் | நெய்தல் | முதிர்வேனில் | ஏமம் | பூப்பு | பிரிதல் | தையல் | தும்பு | தொடையல் |
| நாள் | நாண்முல்லை | பின்பனி | சாமம் | சமைதல் | இருத்தல் | பிரியை | உரு | தனித்தல் |

உ
சிவமயம்

அரிஓம் நன்ருக குருவாழ்க குருவே துணை

எம் ஞானத் தெளிவு குரு சிறுவயது முதல் இயம நியம நெறியில் நின்றதனுல் திருவருள் கூட்டுவிக்க வாசிக்கலை பயின்று அக்கலையின் விளைவால் அமிர்த்தம் அருந்தி அதன் விளைவால் தன்னகத்தே தோன்றும் அகத்தீயை ஆராய்ந்து தெளிந்து அதன் மூலம் நூல்களை செய்துள்ளார்கள். அவர்கள் ஆக்கிய நூல்கள்

1. அகத்தியம்
2. உயிர்நிலைக் கலை இலக்கணம்
3. முத்திநெறி இலக்கணம்
4. கரண இலக்கணம்
5. பண்ணிலக்கணச் சூக்கம்
6. இலக்கிய இராமாயணம்
7. இரத்தினச் சுருக்க இராமாயணம்
8. திருஞானசம்பந்தர் கால நிர்ணய விளக்கம்
9. திருமூலரின் சூனிய சம்பாதனை (உரை விளக்கம்)
10. திருமுறைப் பெருநூல் விளக்கம்
11. திருமகள் திருப்பதிகம்
12. கலைஞானம்
13. இலிங்கபுராணம்
14. ஞான சரஸ்வதி பதிகம்
15. வைத்திய சாஸ்திரம்
16. திருஞானசம்பந்தர் திரு அவதாரச் சிறப்பின் விளக்கம்.
17. திருஞானசம்பந்தப் பெருமான் அருளிச் செய்த இரண்டாம் திருமுறை பொருள்விளக்கம். பூர்வ மீமாம்சை. உத்தர மீமாம்சை.

கலியுகத்தில் கருணை கூர்ந்து நம் உயிருக்கு துணையான நூல்களை தந்திருக்கிருர்கள். நம் உயிர்த்தீயை இயக்கி ஒலி மூலம் ஒளியை உண்டாக்க அதன் மூலம் முத்தி அடைய ஆக்கிய நூல்கள். முதற்பொருளாகிய இறைவனுடைய கலையின் மூலம் ஆக்கியதால் இந்நூல்களுக்கு எல்லாம் அகவுரையாகவும் சாட்சியாகவும் அவனே இருப்பதால் கலியின் கொடுமை தீர ஒவ்வொரு நூலாக வெளி வந்து கொண்டிருக்கிறது.

அவர்கள் மிகவும் கருணை உள்ளம் கொண்டு முத்தாத்தாள் நடுநிலைப்பள்ளியில் முத்தமிழ் வேதத் திருச்சபை நிறுவி பௌர்ணமி தோறும் திருமுறைப் பெருநூல் விளக்கமும் ஞாயிறு தோறும் இலக்கிய இராமாயணத்தையும் இயம்பி செவிக்கு பனிரெண்டு ஆண்டுகள் விருந்து படைத்தருளினுர்கள். அதைத் தொடர்ந்து அவர்கள் காட்டியருளிய நெறி வழியே 38 ஆவது ஆண்டு நிறைவை நோக்கி சீரும் சிறப்புமாக இயங்கி வருகிறது. முத்தி தரும் தெய்வ சபையைக் காண்பதற்கு சேரவாரும் செகத்தீரே என அன்போடு தெளிவு குருவின் ஆசியோடு அழைக்கின்ருேம்.